

மரியாதைக்குரிய திரு.கே. அப்பண்ணாசார்யர் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தாஸ சாகித்ய ப்ராஜெக்டின் முதலாம் சிறப்பு அதிகாரிகளாக இருந்தவர். நாட்டின் புகழ்பெற்ற தாச சாகித்ய வித்வாம்சர். விசேஷ அதிகாரியாக தாச சாகித்யத்தின் அனைத்து பிரகாரங்களையும், பஜனா மண்டலிகளையும் ஒன்றிணைத்து, வளர்த்து, நாட்டின் அனைத்து மூலை முடுக்குகளிலும், ஒவ்வொரு வீடுகளிலும், அனைத்து தாசர்களின் கீர்த்தனைகளின் நாமாம்ருதமானது, அனைத்து சத்பக்தர்களின் வாக்கினில் நடமாடுமாறு செய்த மகானுபாவர். இவருக்கு பால்யத்திலேயே, ஹரிதாசர்களில், ஹரிதாச சாகித்யத்தில் ஈர்ப்பு உண்டானது. இவரது மூத்தோர் இவரை ஹரிதாச சாகித்யத்தினாலேயே வளர்த்தனர். இவர் அபரோக்ஷ ஞானிகளான ஸ்ரீ குருஜகன்னாத விட்டல தாசரின் வம்சத்தவர். தாச சாகித்யத்தின் பற்பல விஷயங்களில் பற்பல கிரந்தங்களை இயற்றியிருக்கிறார்.

இந்த கிரந்தத்தில் தாசரின் கிருதியான, 'பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாஸா'. இது தாசரின் மிகச்சிறந்த பக்தி பாவத்தில் நின்று, தன்னுடையதேயான சிறப்பினால், பஜனாம்ருதத்தில் மிகச்சிறந்த இடத்தில் நிற்கிறது. தாசவாணிக்கு ஒரு சிறந்த ஆசனம் அமைத்துக் கொடுத்ததே இந்த கிருதி என்றும் சொல்லலாம். இன்று பெரும்பாலும் அனைவரின் நாக்கினில் பக்தி பாவத்துடன் பாடுந்தோறும் நாமாம்ருதம் இதுவேயாகும். இந்த தாசரின் கிருதியில் அடங்கியிருக்கும் ஆத்யாத்மிக விஷயங்களை அற்புதமான தன்னுடையதேயான நடையில், சாமான்ய மக்களுக்கும் அர்த்தம் ஆகுமாறு விளக்கியிருப்பவர், மரியாதைக்குரிய ஸ்ரீ.கே. அப்பண்ணாசார்யர். இந்த கிருதி, தாச சாகித்யத்தின் ஆத்யாத்மிக விஷயத்தை விளங்க வைக்கும் நந்தாதீபம். இது இவர் தாச சாகித்யத்திற்கு அளித்த விலைமதிப்பற்ற ஒரு பரிசாகும்.

வெளியீட்டோர்





ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர் இயற்றிய

# பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீநிவாஸா

ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசரின் கிருதிகளில் ஆத்யாத்மிக சிந்தனை

## பாகம் - 2

கன்னடத்தில்:
**திரு. அப்பண்ணாசார்யா.**
முன்னாள் சிறப்பு அதிகாரி
தாசசாகித்ய ப்ராஜெக்ட் திருமலை-திருப்பதி தேவஸ்தானம்

தமிழில்
**'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**




**ஸ்ரீபிரசன்னவெங்கட பிரகாஷன**
#15, 'மந்திராலய' (பிரஷாந்தி நகர)
6ம் 'பி' மெயின் ரோட். 17ம் க்ராஸ்
இஸ்ரோ லேஅவுட், பெங்களூரு - 560078
தொலைபேசி: 080-2666538. கைப்பேசி: 94448011954
Email: rsk9651@yahoo.com/subhasbk@gmail.com
trust@prasannavenkatadasaru.org
website : www.prasannavenkatadasaru.org

ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசரின் கிருதிகளில்
ஆத்யாத்ம சிந்தனை
Written by : Sri.K.Appanna Charya
Published by : Sri Prasanna Venkata Publications
No.15 'Mantralaya' (Prashantinagar)
9th B Main Road, 17th Cross
ISRO Layout, Bangalore - 560078

வெளியீடு: 2021 ஜ்யேஷ்ட சுத்த சதுர்தசி (23-06-2021) ஸ்ரீஸ்ரீபாதராஜர் ஆராதனையன்று வெளியிடப்பட்டது.

பக்கங்கள்: 101

புத்தகம் கிடைக்கும் இடம்:

1. Shrimati: REKHA KAKHANDAKI
No.15, 'Mantralaya' Prashantinagar
9th 'B' Main Road, 17th Cross
ISRO Layout, Bangalore - 560078

2. 'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
கைப்பேசி: 8904458276
Email: haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

## சமர்ப்பணம்

பிரசன்ன சாரித்ர பிரசன்ன ஷோபன வக்த்ர
பிரசன்னாபாங்க நேத்ர பிரசன்னகாத்ர |
பிரசன்ன வெங்கடகிருஷ்ண பிரசன்னனாதரெ நித்ய
பிரசன்ன தரோக்தி பாஹவு பக்தஜனகெ ||



## ஶ்ரீபிரசன்ன வெங்கட தாசர் (1680-1752)

ஶ்ரீபிரசன்ன வெங்கட தாசரின் அந்தர்யாமியான ஶ்ரீ வெங்கடேச ஸ்வாமியின் திவ்ய சரணாரவிந்தங்களில் இந்த கிருதியை பக்திபூர்வகமாக சமர்ப்பிக்கிறோம்.

# வாழ்த்துரை

**ஸ்ரீ பிரஸன்ன வேங்கடதாஸர் இயற்றிய**
**பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீநிவாஸ**

ஸ்ரீ பிரஸன்ன வேங்கடதாஸர் 600க்கும் மேற்பட்ட கீர்த்தனைகள், 20க்கும் மேற்பட்ட உகாபோகங்கள் 9க்கும் மேற்பட்ட ஸூளாதிகள், கோலுப் பாட்டு போன்றவற்றை ரசனை செய்த மஹனீயர். சிறுவயதிலேயே தாய் தந்தையரை இழந்து, உணவிற்கே கஷ்டப்பட்டவர். ஸஜ்ஜனர்களின் சகவாஸத்தால் திருமலை ஸ்ரீ நிவாஸனின் தரிசனம் கண்டு, வாழ்வில் திருப்புமுனை ஏற்பட்டு பகவானே அவருடைய ஸ்வரூப யோக்கியதையைக் கண்டு அவருக்கு தரிஸனம் அளித்து, அங்கிதம் அளிக்கும் விதமாக அவரின் நாவில், "பிரஸன்ன வேங்கட" என்னும் முத்திரையை எழுதி அனுக்கிரகம் செய்துள்ளான். திருமலையில் பகவானே அர்ச்சகர்களுக்கு சூசனை அளித்து, தாஸருக்கு பூஜா விக்கிரகங்களை அருளியுள்ளான். தாஸர் 'ஸத்யபாமா விலாஸ', 'பேத முக்தாவளி' 'நாரத கொரவஞ்சி' 'ஸ்ரீ கிருஷ்ண பாரிஜாத', ''கோபி கீதம்', 'நாராயண பஞ்ஜரம்', 'ஷட்சரண பத்யமாலா' போன்ற உயரிய கிரந்தங்களை அருளியுள்ளார்.

இந்த "பிடனோ நின்னங்க்ரி ஸ்ரீ நிவாஸ" நூலில், தாஸரின் இந்தப் பாடலுக்கு விஸேஷமான அர்த்தங்களையும், தாஸரின் படைப்புகளில் உள்ள ஆன்மீகக் கருத்துக்களின் தொகுப்பினையும் தமிழிலே பாமரரும் அறியும் வண்ணம் தமிழ்வாழ் ஸஜ்ஜனர்களுக்கும் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற உயரிய நோக்கத்துடன் 'ஜகன்னாத கேசவ' திரு சத்யநாராயணன் அவர்கள் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். அவர் சமீபகாலத்தில் வெளியிட்டுள்ள பல மொழிபெயர்ப்பு நூல்களான 'வாதிராஜரின் ஸ்வப்ன பதம்', 'மோஹன தாஸரின் 'கோலு ஹாடு', 'பிரஸன்ன வேங்கட தாஸரின் நாராயண பஞ்சர' மற்றும் 'ஷட்சரண பத்யமாலா' போன்ற நூல்களின் வரிசையில், இதுவும் பெருமை சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. அவருக்கு தாஸரின் அந்தர்யாமியான ஸ்ரீ ஹரி ஆயுள், ஆரோக்கியம், ஐஸ்வர்யம் மற்றும் மனச்சாந்தி இவைகளை அருளி, இதுபோல் இன்னும் பல மொழிபெயர்ப்பு நூல்களைத் தமிழில் வெளியிட வேண்டும் என ப்ரார்த்தனை செய்கிறேன்.

இத்தகைய உயரிய க்ரந்தங்களை தினமும் பாராயணம் செய்து, விஸேஷமான அர்த்தங்களைத் தெரிந்து கொண்டு ஸ்ரீஹரியின் அனுக்ரஹத்திற்குப் பாத்திரராவோமாக!

ஸ்ரீ கிருஷ்ணார்பணமஸ்து

மேடவாக்கம் சென்னை
நாள் : 13-6-2021

'பிரஸங்க பூஷணம்'
'பிரவசன பூஷணம்'
S.லக்ஷ்மிபதிராஜா

# எனது சிறு குறிப்பு

பிரசன்ன வெங்கட தாசர், ஹரிதாச சாகித்ய அபிமானிகளின் மனதைக் கவர்ந்த ஹரிதாசர். அவருடைய ஒவ்வொரு கிருதியும், ரஸரூபியான பகவந்தனைப் புகழும் நீரூற்றுகள் ஆகும். பார்த்து அனுபவிக்கும் பாக்கியம் நமதாக வேண்டும். அதனையும்கூட அந்த மகிதாத்மரே நமக்கு அருளி, நம் பிறவியை தன்யராக்க வேண்டும். ஸ்ரீனிவாஸனின் மகா சாம்ராஜ்யத்தில், (TTDயில்) அவனுக்கு சேவை செய்யும் பாக்கியம், பிரசன்ன வெங்கட தாசரினாலேயே எனக்கு கிடைத்தது. என் பாட்டி, தந்தை, தாய் இவர்களால் எனக்கு சிறு வயதிலிருந்தே ஹரிதாசர்களில், ஹரிதாச சாகித்யத்தில் நாட்டம் பிறந்தது. அந்த என் பெரியவர்கள் ஹரிதாச சாகித்யத்தினாலேயே என்னை வளர்த்தனர். 'பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாஸா' என்னும் பிரசன்ன வெங்கட தாசரின் கிருதியானது, என் மனதை கவர்ந்த முதல் கிருதியாகும். என் தாரக மந்திரம். இந்த கீர்த்தனை, அந்த கருணாமூர்த்தி ஸ்ரீனிவாசனின் கருணையால், அனைத்து பஜனா மண்டலிகளின் தாரக மந்திரமாயிற்று. எவ்வளவு பாடல்களைப் பாடி பஜனை செய்தாலும், கடைசியில் 'பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாஸ' என்னும் பாடலைப் பாடவில்லையெனில், தயிர் இல்லாத விருந்து போல ஆகிறது.

பஜனா மண்டலிகளின் கார்யகிரமங்களில் முகுடமாக, பஜனா மண்டலிகளில் பாடுபவர்களின் மனங்களை பவித்ரமாக்கும், சுப்ரபாத நிகழ்ச்சியில் இந்த கீர்த்தனையின் அர்த்தானு சிந்தனையை, பலமுறை ஸ்ரீனிவாசன் செய்வித்தான். கீர்த்தனையின் பின்னணியில் இருக்கும் தாசரின் இதயத்தை, அவரது சிந்தனையை வெளிக் கொணரவேண்டும் என்னும் ஆசை பிறந்தது. என் புத்தி, அத்யயனங்களின் குறைவினைக் கண்டு அதனை செய்யாதிருந்தேன். சமக்ர ஹரிதாச சாகித்யத்தை கரைத்துக் குடித்த அனேக வித்வாம்சர்கள் சமூகத்தில் இருந்தாலும், அனைவரையும் விட்டு, சிறியவனான என்னை இந்த சேவைக்கு வரவேற்ற டாக்டர். சுபாஷ் மற்றும் ரேகா காகண்டிகி அவர்களுக்கு நான் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். காகண்டிகி அவர்கள் என் பிறவியை பவித்ரமாக்கி இருக்கின்றனர். அவர்களுக்கும் ஹரிதாசரின் வம்சத்தவரான மூத்தவர்கள் அனைவருக்கும் அனந்த நமஸ்காரங்கள்.

அனைத்து வித்வாம்சர்களின், அனைத்து ஹரிதாச சாகித்ய ப்ரேமிகளின் ஆசிர்வாதத்தினை எப்போதும் விரும்புகிறேன்.

**கே.அப்பண்ணா**
**ஹரே ஸ்ரீனிவாஸா**

# வெளியிடுவோரின் உரை

ஹரிதாச சாகித்யத்தில் எப்போதும் வழிகாட்டியாக நம்முடன் இருக்கும் வாணி என்றால், அனன்ய அர்த்தங்களுடன், பக்தியுடன், எப்போதும் உன்னை விடமாட்டேன் ஹரியே, நான் உன்னவன் என்று கூறும் பாவம். இந்த அனைத்து பாவங்களும் சேர்ந்து, ஹரிதாச வாணியை பிரவகிக்கச் செய்தது - தாசர கீர்த்தனைகள். ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசரின் கீர்த்தனைகளும் இத்தகையவையே.

இந்த கீர்த்தனைகளில் காணப்படும் வாணியை, பக்த ஜனர்களிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்னும் தாசரின் ப்ரேரணையின்படி, இந்த வேலையை துவக்கினோம். நம் அனைவரின் நிறுவனங்களான ஸ்ரீபிரசன்ன வெங்கட பிரகாஷன மற்றும் ஸ்ரீபிரசன்ன வெங்கட கல்சுரல் மற்றும் சாரிடபிள் டிரஸ்ட் (ரி), பெங்களூரு, நம் யோசனையின்படி, இப்போது இரண்டாம் பகுதியாக வந்திருக்கும், தாசரின் சில விசேஷ கிருதிகளை, அதன் அர்த்தங்களை ஆராய்வது, அதில் உள்ள சத்வங்களுடனான பார்வையுடன், தம் அற்புதமான விளக்கங்களுடன் அதனை நம் எதிரில் வைத்தவரான, நாட்டின் புகழ்பெற்ற தாச சாகித்ய வித்வாம்சரான மரியாதைக்குரிய திரு கே. அப்பண்ணாசார்யர், இனி அடுத்தும் தாசரின் விசேஷ கிருதிகளை அவரின் அந்தரங்கத்தில் உள்ள ஆத்யாத்ம ஞானத்தை, பக்த ஜனர்களுக்கு கொண்டு சேர்க்க வேண்டும் என்பது நம் பேராசை ஆகும்.

இந்த கிரந்தத்தில் தாசரின் கிருதியான, 'பிடேனோ நின்னங்க்ரி ஸ்ரீநிவாஸா'. இது தாசரின் மிகச்சிறந்த பக்தி பாவத்தில் நின்று, தன்னுடையதேயான சிறப்பினால், பஜனாம்ருதத்தில் மிகச்சிறந்த இடத்தில் நிற்கிறது. தாசவாணிக்கு ஒரு சிறந்த ஆசனம் அமைத்துக் கொடுத்ததே இந்த கிருதி என்றும் சொல்லலாம். இன்று பெரும்பாலும் அனைவரின் நாக்கினில் பக்தி பாவத்துடன் பாய்ந்தோடும் நாமாம்ருதம் இதுவேயாகும். இந்த தாசரின் கிருதியில் அடங்கியிருக்கும் ஆத்யாத்மிக விஷயங்களை அற்புதமான தன்னுடையதேயான நடையில், சாமான்ய மக்களுக்கும் அர்த்தம் ஆகுமாறு விளக்கியிருப்பவர், மரியாதைக்குரிய ஸ்ரீ.கே. அப்பண்ணாசார்யர்.

இவர் வேறு காரியங்களில் ஈடுபட்டிருந்தாலும், மிகவும் குறைந்த சமயத்தில் இந்த சிறப்பான கிருதியை இயற்றிக் கொடுத்திருக்கிறார். அவருக்கு எவ்வளவு நன்றியை தெரிவித்துக் கொண்டாலும், அது போதாது. அவர் மூலமாக தாசரின் இதர கிருதிகளில் இருக்கும் ஆத்யாத்மிக விஷயங்களை விளக்கி, அவற்றை நம் பிரகாஷனத்தின் மூலம் தாசரின் பக்த ஜனர்களுக்கு சென்று சேர்ப்பிக்கும் வாய்ப்பு செய்து கொடுக்க வேண்டும் என்று அவரிடம் வேண்டிக் கொள்கிறேன்.

ஸ்ரீபிரசன்ன வெங்கட பிரகாஷன மற்றும்
ஸ்ரீபிரசன்ன வெங்கட கல்சுரல் அண்ட் சேரிடபிள் டிரஸ்ட் (ரி)
சார்பாக
**ஸ்ரீமதி ரேகா காகண்டகி**
**டாக்டர். சுபாஷ் காகண்டகி**

# ஹரே ஸ்ரீனிவாஸா

இந்தியர்களின் உண்மையான செல்வம் - வேதங்கள். இவற்றில் சொல்லப்படாத விஷயங்களே இல்லை. ஸ்ருஷ்டி ரகசியத்திலி ருந்து துவங்கி, மானவ வாழ்க்கையின் மேம்பாட்டிற்குத் தேவை யான அனைத்து சாதன விஷயங்களும் இதில் சொல்லப்பட்டி ருக்கின்றன. பி.ஹோரவர் என்னும் மேற்கத்திய தத்துவவாதி ஒருவர் 'உபநிஷத்துகளைப் போல நலன்களை தரக்கூடிய வேறொன்று இல்லை. இந்த உபநிஷத் ஆனது, வாழும் காலத்தில் தாயைப் போல ஆறுதல் கொடுக்கிறது. பிறகான காலத்திலும்கூட இந்த உபநிஷத் தாயே என்னை உண்மையாக சமாதானம் செய்வாள்' என்று கூறி அபௌருஷேயங்களான ஸ்ருதிகளைப் பற்றி தனக்கு இருக்கும் உயர்ந்த அபிப்பிராயத்தை தெரிவிக்கிறார்.

ஸ்ம்ருதி, புராண, தந்த்ர, பூர்வமீமாம்ஸை, உத்தர மீமாம்ஸ ஆகிய சாஸ்திரங்கள், இந்த வேத உலகத்தினை சுலபமாக புரியவைக்கக்கூடியன. இவற்றிற்கு வியாக்யானங்கள் அனேக ஆசார்யர்களால் இயற்றப்பட்டுள்ள பாஷ்ய, டீகா, டிப்பணிகள் ஆகியவை. வைதிக, லௌகிக சம்ஸ்க்ருத மொழியினால் ஆன இந்தியர்களின் ஆத்யாத்மிக உலகத்தை பொதுவாக மூன்று விதங்களில் பிரிக்கலாம்.

1. வேத சாகித்ய
2. வியாஸ சாகித்ய
3. தாஸ சாகித்ய

வைதிக ஸம்ஸ்க்ருத மொழியில் இருக்கும் அபௌருஷேய என்று புகழ்பெற்ற ஸ்ருதி, வேத சாகித்ய எனப்படுகிறது.

கௌதமஸ்ய ருஷேஷ்மாபாத் ஞானேத்வஞானதாங்கதே
ஸங்கீர்ண புத்தயோ தேவாத்ர பிரம்மரு புரஸ்ஸரா: |
ஷரண்யம் ஷரணம் ஜக்மு: நாராயணமனாமயம்
தைர்விக்ஞாபித கார்யஸ்து பகவான்புருஷோத்தம:
அவதீர்ணோ மஹாயோகி ஸத்யவத்யாம் பராஷராத் ||
என்னும் ஸ்காந்த புராணத்தின் வசனத்தைப் போல ஸ்ரீமன் நாராயணனே வேதவியாஸ ரூபத்தினால் அவதரித்து வேதங்களை பிரித்தார். வேதார்த்த நிர்ணயங்களான 18 புராணங்களையும், பிரம்ம ஸூத்ரங்களையும், பாரதாதி இதிகாச கிரந்தங்களையும் இயற்றினார். இவை அனைத்தும் வியாச இலக்கியம் (வியாச சாகித்ய) எனப்படுகின்றன.

வைதிக மதாசார்யர்கள் அனைவரும் பக்தி தத்வத்தை அங்கிகரித்தவர்கள். இதனால், பரபிரம்மனுக்கு ஈஷத்வத்தையும், ஜீவர்களுக்கு தாசத்வத்தையும் ஏதோவொரு நிலையில் அங்கிகரித்தே ஆகவேண்டியிருக்கிறது. பக்தி பாவத்தினால் வணங்கி, தாசத்வத்தை அங்கிகரித்த அனைத்து ஆசார்யரின், ரிஷிகளின், ஞானிகளின் இலக்கியங்கள் அனைத்தும் தாச சாகித்யங்கள் எனப்படுகின்றன. முக்கியமாக, எப்போதும் எங்கேயும் ஜீவ-ஈஷ்வரர்களின் நடுவில் தாச-ஈச பாவத்தை முழுமையாக வெளிப்படுத்திய ஆசார்ய மத்வரின் மற்றும் அவரைப் பின்பற்றுபவர்களின் கிரந்தங்கள் அனைத்தும் தாச சாகித்யத்தையே சேர்ந்தவை ஆகும்.

வேதங்களின் உண்மையான அர்த்தம் சரியாக புரியாதபோது, புராண பிரம்மசூத்ராதிகள் தோன்றின. ஆனால் இவற்றின் உண்மையான அர்த்தம்கூட சரியாக புரியாதபோது, அனேக ஆசார்யரின் வியாக்யான கிரந்தங்கள் தோன்றின. நாளடைவில், சம்ஸ்கிருத மொழி, வெறும் பண்டித வர்க்கத்திற்கு மட்டுமே உரியதாக ஆயிற்று. சம்ஸ்கிருத மொழியை அறியாத பாமர மக்களுக்கு, அந்த மொழியில் இயற்றப்பட்ட கிரந்தங்களும், அதில் அடங்கியிருக்கும் ஆத்யாத்மிக விஷயங்களும், எட்டாக்கனி ஆகின.

இதனால் ஆத்ம முன்னேற்றத்திற்குக் காரணமான பரவித்யையிலிருந்து மக்கள் விலகத் துவங்கினர். இந்த துயர நிலையில் ஞானிகள், அந்தந்த பிராந்தியங்களில் அவதரித்து, அந்த பேசுமொழியில் கிருதிகளை இயற்றி, வேதாந்த விக்ஞானத்தை வளர்த்தனர். இந்த பின்னணியில் வெளிப்பட்ட சாகித்யமே கர்னாடக ஹரிதாச சாகித்யம். இந்த கர்னாடக ஹரிதாச சாகித்யம், ஆசார்யர் மத்வரின் நிர்ணய விஷயங்களையே பின்பற்றியிருக்கிறது. பாமர மக்களின் விழிப்புணர்வுக்காக வந்த கர்னாடக ஹரிதாச சாகித்யம், பத, பத்ய, உகாபோக, ஸுளாதி, வ்ருத்த நாமா, லகுகாவ்ய, மஹாகாவ்யங்களின் வடிவங்களில் வந்திருக்கிறது.

த்வைத சித்தாந்த பிரதிஷ்டாபனாசார்யர் என்று புகழ்பெற்றிருக்கும் ஆசார்ய மத்வருக்குப் பிறகே இந்த கர்னாடக ஹரிதாச சாகித்யம் புகழ்பெற்றது. ஆசார்ய மத்வரே இந்த சாகித்யத்தின் தொடக்கப்புள்ளி ஆகிறார். ஆசார்யரின் த்வாதச ஸ்தோத்திரங்கள் லய பத்தமாக இருக்கிறது. ஆசார்யர் தானே துளு மொழியில் கீர்த்தனைகளை இயற்றினார் என்னும் பேச்சும் இருக்கிறது. லயபத்தமாக இருக்கும் சாகித்யத்தின் பார்வையில், கன்னட கீர்த்தனைகளின் இயற்றுதலுக்கு முதலில் அடி போட்டவர் ஶ்ரீநரஹரி தீர்த்தர். பிறகு இதே வழியில் ஶ்ரீஶ்ரீபாதராஜர், ஶ்ரீவியாசராஜர், ஶ்ரீவாதிராஜர், ஶ்ரீபுரந்தரதாசர், ஶ்ரீகனகதாசர், ஶ்ரீமஹிபதி தாசர், ஶ்ரீபிரசன்ன வெங்கட தாசர், ஶ்ரீவிஜயதாசரே முதலான மகான்கள் இதனை முன்னெடுத்தனர். இன்றுவரை வந்திருக்கும் ஹரிதாசர்களின் எண்ணிக்கை 350க்கும் அதிகமாக இருக்கிறது.

நாட்டின் அனைத்து இடங்களிலும் சாதுகள், ஹரிதாசர்கள், வாக்யேயகாரர்கள் அவதரித்து, தத்தம் பேசுமொழியில் கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார்கள். அனைவரும் தமது பக்தியின் பாசக்கயிற்றால் பகவந்தனை பிடித்து கட்டியவர்களே. ஞான வைராக்யங்களுக்கு பிரதிநிதிகளே. இதில் வியக்கத்தக்க விஷயம் என்னவெனில், தமிழ்நாட்டின் ஆழ்வார்களின் பரம்பரையோ, கர்னாடகத்தின் சிவசரணர்களின் பரம்பரையோ, தெலுங்கு நாட்டின் அன்னமாசார்ய, தியாகராஜ, ராமதாசரே முதலான வாக்யேயகாரர்களின் பரம்பரையோ, வட இந்தியாவின் ஸந்தர்களின் பரம்பரையோ, இன்று வரை தொடர்ந்து வரவில்லை.

உதாரணத்திற்கு பதகவிதா பிதாமகர் என்று புகழ்பெற்ற அன்னமாசார்யரின் பரம்பரை அவரின் பேரன் வரை மட்டுமே வந்து முடிந்துவிட்டது. இதைப்போலவே மேற்சொன்ன அனைவரின் பரம்பரையுமே மூன்று அல்லது ஐந்து தலைமுறைக்கு மட்டுமே முன்னேறி பின்னர் நின்றுவிட்டது. நரஹரி தீர்த்தரிலிருந்து தொடங்கிய கர்னாடக ஹரிதாச பரம்பரை மட்டும் இன்று வரைக்குமே தொடர்ந்து வந்திருக்கிறது. இந்த பரம்பரைக்கு ஒரு சிறப்பான சம்பிரதாயம் உள்ளது. ஹரிதாசர்களுக்கு இருக்க வேண்டிய ஆடை அலங்காரங்களின் லட்சணங்களை ஶ்ரீபுரந்தரதாசர் தம் கிருதிகளில் தெளிவாக கூறியுள்ளார். ஹரிதாசரின் வேடத்தில் முதன்முதலில் சமூகத்திற்கு தரிசனம் அளித்தவர் ஶ்ரீபுரந்தரதாசர். 'ஆதத்தெல்லா ஒளிதே ஆயிது' என்னும் கிருதி மூலமாக ஶ்ரீபுரந்தரதாசர், ஹரிதாசன் ஆக விரும்புபவன், தம்பூரி மீட்டியவாறு, துளசி மாலையை அணிந்தவாறு, கோபாள புட்டியை தோளில் மாட்டியவாறு இருக்க வேண்டும் என்று கூறுகிறார்.

இதைப்போலவே, தம்பூரி மீட்டிதவ என்னும் உகாபோகத்தினால் ஹரிதாசரின் காலில் சலங்கை, கையில் தாளக்கட்டையை பிடித்துக்கொண்டு இருக்கவேண்டும் என்றார். பஞ்சபேதத்தினால் இருக்கும் பிரபஞ்சத்திற்கு தலைவனான பஞ்சரூபாத்மகனான ஶ்ரீஹரியின் பாத பத்மங்களை, தம் மனதில் நிறுத்தி பூஜிக்கும் தீக்ஷை உள்ள அனைத்து ஹரிதாசர்களுக்கு தம்பூரி, தாள, துளசிமணி, சலங்கை, கோபாள புட்டி இவை ஐந்தும் புற-தீக்ஷைகள் ஆகும்.

தலைக்கு காவி வஸ்திரம் சுற்றும் விஷயத்தில் தாசரின் வசனம் கிடைக்காமல் இருந்தாலும், இந்த ஏற்பாடு துவக்கத்திலிருந்தே வந்திருக்கிறது என அறியலாம். காவி வஸ்திரம் வைராக்கியத்திற்கு குறியீடு. ஹரிதாசர்கள் அனைவரும் க்ருஹஸ்தர்களே. தாம் கிருஹஸ்தர்கள் ஆனாலும், தமக்கு வைராக்கியம் நிரம்பியிருக்கிறது என்று உணர்த்துவதற்காகவே இந்த காவி வஸ்திரத்தை அணிந்துள்ளனர். இத்தகைய புற தீட்சை எந்த

பரம்பரையிலும் இல்லை. இந்த தீக்ஷையைப் பெறுவதும்கூட குருகளிடமிருந்தே ஆகவேண்டும். தாஸ தீட்சையைக் கொடுத்த குருகள், அங்கித நாமத்தைக்கூட அருள்கிறார். அடுத்து இந்த அங்கித நாமத்தினாலேயே கிருதிகளின் ரசனை துவங்குகிறது.

வியாசராயர் புரந்தரதாசருக்கு குருகள். வியாசராயர், தாசருக்கு தாச தீக்ஷையைக் கொடுத்து அருளினார். அன்று வரை ஸ்ரீநிவாச நாயகர் என்று பெயர் பெற்றிருந்த தாசர், அங்கித நாமம் பெற்ற பிறகு, புரந்தரதாசர் என்று புகழ்பெற்றார். இந்த கர்னாடக ஹரிதாச பரம்பரையில் ஸ்ரீவியாசராயர், ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீபிரசன்ன வெங்கட தாசர் போன்ற சில ஹரிதாசர்களுக்கு சாட்சாத் பகவந்தனிடமிருந்தே தாசதீட்சை கிடைத்தால், ஸ்ரீவிஜயதாசரே முதலான சிலருக்கு இவை கனவில் குருகளிடமிருந்து கிடைத்திருக்கின்றன. ஆகமொத்தம், இந்த அபூர்வமான சம்பிரதாயம், ஹரிதாச பரம்பரைக்கு மட்டுமே உரித்தானது. மிகவும் முந்தைய காலத்திலிருந்தே துவங்கி வருகிறது.

இன்னும் ஹரிதாச சாகித்யத்தின் சிறப்பினைப் பற்றி கூறவேண்டுமென்றால், இது ஒரு அபூர்வமான சாகித்யம். ஆழமான வேதங்களின் உண்மையான அர்த்தங்களை விவரிக்க வந்த வியாச சாகித்ய மற்றும் ஸம்ஸ்கிருத தாச சாகித்யங்களின் வழியில் வந்த சிறப்புமிக்க சாகித்யமாகும். ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராண, தந்த்ரசார, வேதாந்த கிரந்தங்களில் இருக்கக்கூடிய அபூர்வ அர்த்தங்களை, பாமர மக்களுக்கு புரியும்படியான மொழியில் விளக்கிய விதமானது, இந்த கன்னட சாகித்யத்திற்கே வாய்ந்த பெருமையாகும்.

சக்ராப்ஜ மண்டலம், பத்ரிகா மண்டலம், தேவபூஜா பத்ததி இவை தந்த்ர சாஸ்திரங்களில் வரும் மிகவும் ஆழமான விஷயங்களாகும். பண்டிதர்களுக்கே புரிவதற்கு சிறிது கடினமாக விஷயங்களாகும். இத்தகைய கஷ்டமான அபூர்வ விஷயங்களை ஹரிதாசர்கள் அழகாக, சுலபமாக, லயத்துடன் பாடி விவரித்துள்ளனர். இன்றைக்கும் கன்னட நாட்டில் பற்பல மகான்கள் தத்தம் வீடுகளில் சக்ராப்ஜ மண்டலத்தை கோலத்தில் போடுகின்றனர். இந்த விஷயத்தில் ஹரிதாசர்களின் உதவி மறக்கமுடியாதது.

ஸ்ரீபன்னஞ்சே கோவிந்தாசார்யர் தம் உரையுடன் வெளியிட்ட தந்த்ரசார சங்க்ரஹ புத்தகத்தில், சக்ராப்ஜ மண்டலத்தைக் குறித்து விளக்கியவாறு, ஸ்ரீவிஜயதாசரின் உதவியைக் குறித்து சொல்லியுள்ளார். ஹரிதாசர்களின் உதவி இந்த சக்ராப்ஜாதி மண்டலங்களை, கிருதிகளின் ரூபத்தில் விளக்குவதோடு முடிந்துவிடவில்லை. ஜனசாமான்யர்களுக்கு இந்த மண்டலங்களின் அறிமுகத்தை இன்னும் சுலபமாக செய்து கொடுத்து, மிகப்பெரிய படங்களைக்கூட வரைந்திருக்கின்றனர். இந்த மிகப்பெரிய வேலையை முதன்முதலில் செய்தவர் ஸ்ரீகோபாலதாசர். விஜயதாசாதி ஹரிதாசர்கள் வரைந்த படங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. கோபாலதாசருக்குப் பிறகான ஜகன்னாததாசரே முதலான பல ஹரிதாசர்கள், ஆழமான பல விஷயங்களை மக்களுக்கு படங்களின் மூலம் விளக்க முற்பட்டனர்.

உபநிஷத்கள் மற்றும் புராணங்களின் ரகசியங்களை அறிந்து சொல்வதில், ஹரிதாசரின் முயற்சி வெற்றி பெற்றிருக்கிறது. இத்தகைய ஹரிதாசர்களின் கிருதிகள் உபநிஷத்களின் மொழிபெயர்ப்பு என்று கூறினால்கூட தவறு இல்லை. ஹரிதாசர்கள் தம் சில கிருதிகளில் ஒரு உபநிஷத்தையோ அல்லது உபநிஷத்தின் ஒரு பாகத்தையோ விளக்கியிருப்பதைக் காணலாம். 'த்வாஸுபர்ணா ஸயுஜாஸகா' என்னும் கிருதியை புரந்தரதாசர் 'ஜயவதெ ஜயவதெ ஈ மனெதனகெ – பிடுபிடு பிடுபிடு மன ஸம்ஷயவ' என்னும் பாட்டில் முழுமையாக விளக்கியிருக்கிறார். நாட்டுப்புற பண்ணில் இருக்கும் இந்தப் பாடல் 'புடு புடிகெ ஹாடு' என்று சொல்லப்படுகிறது.

இந்த காரணத்தினாலேயே புரந்தரதாசரின் மொத்த கிருதிகளும் 'புரந்தர உபநிஷத்' என்றே அழைக்கப்படுகிறது. ஸ்ரீவிஜயதாசரின் மொத்த சுளாதிகள் பூர்ண உபநிஷத்தின் அர்த்தங்களையே விளக்குகிறது. சில ஹரிதாசர்கள் புகழ்பெற்ற புராணங்களில் இருக்கும் அபூர்வ பாகங்களை,

எளிதான மொழியில் பாடி, பாமர மக்களுக்கு கொடுத்தனர். பாகவத 10ம் ஸ்கந்தத்தின் கிருஷ்ணனின் கதை, ஸுதாம சரித்ரை, ஸுபத்ரா பரிணய, நள உபாக்யான, கஜேந்திர மோட்ச, பிரகலாத சரித்ரெ, ஷகுந்தலா உபாக்யான கதை போன்ற அனேக கதைகள் மிகவும் புகழ்பெற்றவை. இந்த மிகப்பெரிய காரியத்திற்கு முதன்முதலில் அடியெடுத்து வைத்தவர் கனகதாசர் என்றால், அடுத்தது பிரசன்ன வெங்கட தாசர்.

ஒவ்வொருவனும் தன்னையும், புற பிரபஞ்சத்தையும் இரு சந்தர்ப்பத்தில் மறக்கிறான். முதலாவது ஆத்யாத்மிக பிரபஞ்சத்தில். இரண்டாவது மறதி, லௌகிக பிரபஞ்சத்தில். ஞான பக்தி வைராக்யங்களால் பூர்ணனான ஜீவி, அந்த பகவந்தனின் அருளால், ஹ்ருதயாந்தர்யாமியான தன் பிம்பனின் தரிசனத்தைப் பெறுகிறான். இதுவே அபரோக்ஷம். அதிஷய ஆனந்தத்தை தரக்கூடிய அந்த சந்தர்ப்பத்தில், அனைத்து ஜீவியும் தன்னையும், தன் அனைத்தையும் மறந்துவிடுகிறான்.

இதைப்போலவே தைஹிக ஆனந்தத்தை தரக்கூடிய லௌகிக விஷயங்களிலும், அனைவரும் அனைத்தையும் மறக்கின்றனர். முதலாவது நிரந்தர ஆனந்த. இரண்டாவது தற்காலிக ஆனந்தம். ஒன்று பந்தத்திலிருந்து விடுதலை அளிப்பது; மற்றொன்று கட்டுப்படுத்துவது. கட்டுப்படுத்துகிறது என்பதால் யாரும் இந்த இரண்டாவதை விடுவதில்லை. ஆசிரமங்களில் கிருஹஸ்தாசிரமம் மிகவும் சிறந்தது. பிரஜோத்பத்தி மிகவும் முக்கியம். ‘இரபேகு இத்து ஜெயிஸபேகு’. பந்தமும் பந்தமோட்சம் ஆகவேண்டும். உயிரை எடுக்கக்கூடிய விஷமே, மருந்தாகவும் பயன்படுவதைப் போல, உலகத்தின் எந்த சாகித்யத்திலும் இதற்கு தேவையான உபாயங்கள் குறிப்பிடப்படவில்லை. இருட்டான இந்த இந்த மார்க்கத்தில் பயணிக்கும் அனைத்து ஜீவிகளுக்கும், வைதிக சாஹித்யம் மட்டுமே கைவிளக்காக இருக்கிறது. ப்ருஹதாரண்யக மற்றும் சாந்தோக்யங்களில் இதன் விளக்கம் இருக்கிறது.

அனிருத்த ஷரீரத்தினால் கூடிய ஜீவியை பகவந்தன் ஆதியில் ஆகாஷத்தில் வைக்கிறான். பிறகு மேகமண்டலங்களில் இறக்கி, மழையின் மூலமாக பூமியில் விளையும் தான்யாதிகளில் வைக்கிறான். திரும்ப அங்கிருந்து புருஷனின் தேஜோமயமான ரேதஸ்ஸில் சில காலங்கள் வைத்து, அந்த புருஷ ரேதஸ் மூலமாக ஸ்த்ரி கர்ப்பத்தில் வைக்கிறான். பிறக்கும் அந்த ஜீவிக்கு மாத்ரு கர்ப்பத்தில் ஸ்ரீஹரி அனிருத்தாதி பஞ்சரூபங்களால் ஸ்தூல சரீரத்தை அருள்கிறான். இங்கு ஆகாயம், மேகம், பூமி, புருஷ, ஸ்த்ரி இந்த ஐந்தும் அக்னிகள். இந்த ஐந்து அக்னிகளில் தேவதைகள், ஜீவிகளை ஸ்ரீஹரியிடம் ஹோமிக்கிறார்கள். என்று விளக்கும் கிரமத்திற்கு ‘பஞ்சமஹாயக்ஞ’ என்று பெயர்.

லௌகிக சுகானுபவத்தில், மிகவும் உத்தமமான ஆத்யாத்மிக சுகானுபவத்தின் ரகசியத்தை தெரிவித்த உபநிஷத்கள், லௌகிக செயல்களை யக்ஞம் என்று சொல்கின்றன. இந்த அனுசந்தானத்துடன் உத்தம பிரஜோத்பத்தி மற்றும் பகவத் அனுக்கிரகம் ஆகியவையும் ஆகின்றன. ‘காயகவே கைலாஸ’ (செய்யும் தொழிலே தெய்வம்) என்கிறது பழமொழி. இந்த அபூர்வமான உபநிஷத் ரகசியத்தை கர்னாடக ஹரிதாசர்கள் கன்னடத்தில் மொழிபெயர்த்து சமூகத்திற்கு மிகப்பெரிய உதவி செய்திருக்கின்றனர். இந்த சாகித்யத்தைத் தவிர மற்ற எந்தவொரு சாகித்யமும் இந்த அபூர்வ விவரணையை விளக்கவில்லை. இதுவே ஹரிதாச சாகித்யத்தின் சிறப்பு.

‘பஹுசித்ர ஜகத் பஹுதா கரணாத் பரஷக்திரனந்த குண:பரம:’ – இது ஆசார்ய மத்வரின் அமிர்த வாணி. விசித்திர ரீதியில் படைக்கப்பட்ட இந்த உலகத்தில் அறிவு மிகவும் அவசியம். இதனால், பகவந்தனின் சக்தி, சாமர்த்தியங்களின் அறிவு கிடைத்து, குணநிதியான அவனின் சர்வோத்தமத்வம் தெரிய வருகிறது. இந்த சராசராத்மகமான அனந்தவிஸ்வத்தின் ஸ்ருஷ்டி கர்த்தன், ஸ்ரீஹரி. வேதங்களில், புராணங்களில், ஸ்ருஷ்டியின் ரகசியம் மிகவும் விளக்கமாக சொல்லப்பட்டிருக்கிறது. புராண லட்சணத்தில் ஸ்ருஷ்டி கிரமத்தின் வர்ணனை முதலாம் இடத்தையே பிடித்திருக்கிறது.

ஸ்ருஷ்டி கிரமத்தை முழுவதுமாக ஒரே புராணத்தில் கூறாமல், வேதவியாசர், அதனை, ஒவ்வொரு புராணத்தில் ஒவ்வொரு பாகமாக விளக்கியுள்ளார். இவை அனைத்தையும் ஒரே இடத்தில் சேர்த்தால் மட்டுமே முழுமையான ஸ்ருஷ்டி கிரமம் புரிகிறது. இந்த மஹத் காரியத்தை நிறைவேற்றியவர் என்றால் அது கர்னாடக ஹரிதாசர்களே. பண்டிதர்களுக்கும்கூட ஸ்ருஷ்டி பிரகரணம் கடினமாக இருக்கிறது. ஹரிதாசர்கள் மட்டும் இந்த கடினமான பிரகரணத்தை கன்னடத்தில், சுலபமாக அர்த்தம் புரியுமாறு, அழகாக பத சுளாதிகளின் ரூபத்தில் இயற்றி, சமூகத்திற்கு விளக்கியுள்ளனர்.

விஸ்வத்தின் நடுவில் இருந்து, வாழ்க்கையை நடத்தும் ஜீவிகளுக்கு இதன் ஞானம் மிகவும் அவசியம். இன்றைய விக்ஞானிகளின் முயற்சிகள் அனைத்தும் இதற்காகவே ஆகியிருக்கின்றன. இந்த மஹாகாரியத்தை ஆயிரக்கணக்கான ஆண்டுகளின் முன்பே தம் ஆத்மசக்தியினால் அறிந்த புகழ், பாரதிய மகரிஷிகளுக்கு சேர்ந்தது. இதனை மேலும் எளிமையாக்கி, சமூகத்திற்கு புரியவைத்த மகிமை, கர்னாடக ஹரிதாசர்களுக்கு சேர்ந்தது. இது ஹரிதாச சாகித்யத்தின் சிறப்பு.

ஹரிதாச சாகித்யத்தின் மற்றொரு சிறப்பு என்னவென்றால், அனைத்து தாத்விக தேவதைகளின் அறிமுகம் செய்து கொடுத்தது. தேவதைகளில் விஷ்ணு, ருத்ர, பிரம்ம, வாயு, அக்னி, சூர்ய, யம முதலான அனைத்து தத்வாதிபதிகளின் வர்ணனை இருக்கிறது. அங்கு அந்தந்த தேவதைகளின் இடம், செயல், இருப்பு ஆகியவை வர்ணிக்கப்பட்டுள்ளது. வேதங்களுக்கு சம்பந்தப்பட்ட இந்த தேவதைகளின் அவதார கதைகள் புராணங்களில் விளக்கப்பட்டுள்ளன. இப்படியாக ஸ்ருதி புராணங்களில் காணப்படும் அனைத்து தேவதைகளின் மஹாமஹிமைகளையும் ஹரிதாசர்கள் தங்கள் கிருதிகளில் பாடியிருக்கின்றனர்.

வைதிக பூமி எனப்படும் பாரதத்தில் ஒரு விசித்திரமான சூழ்நிலையை பார்க்கலாம். சைவ சாகித்யத்தில் வைஷ்ணவ தேவதைகளின் வர்ணனையோ, உபாசனைகளோ தென்படுவதில்லை. இந்த சாகித்யத்தில் விஷ்ணு, லட்சுமி, வாயு, கருடன், சேஷ முதலான தேவதைகளின் உபாசனைக்கு இடம் இல்லை. இதனை வீர சைவ சாகித்யத்தில் தெளிவாக பார்க்கலாம். இதைப்போலவே, ஸ்ரீவைஷ்ணவ சாகித்யத்தில் (ஆழ்வார்களின் திவ்ய பிரபந்தங்களில்), சைவ சம்பந்த தேவதைகளுக்கு இடம் இல்லை. இங்கு ருத்ர, பார்வதி, வினாயக முதலான தேவதைகளுக்கான வர்ணனை தென்படுவது இல்லை. ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில், பதகவிதா பிதாமகர் என்று ஆந்திரத்தில் புகழ்பெற்ற அன்னமாசார்யரின் கிருதிகளில் இந்த நிலையை காணலாம்.

கர்னாடக ஹரிதாசர்கள் மட்டும் தாம் நம்பிய வழியில் வேதப்ரதிபாத்யரான அனைத்து சாத்விக தாத்விக தேவதைகளையும் வணங்குகின்றனர். த்வைத மதத்தை பின்பற்றுபவர்களான ஹரிதாசர் விஷ்ணுவை சர்வோத்தமனாக அங்கீகரித்தாலும், மற்ற அனைத்து தேவதைகளையும் தாரதம்யத்தின்படி வணங்குகின்றனர். ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராண ப்ரதிபாத்யரான தேவதைகளை, அதே வழியில் வர்ணித்தவாறு, அந்த தேவதைகளின் ஸ்வரூப, அம்ஷ, ஆவேஷ, அவதாராதிகளையும், அவரின் செயல்கள், இருப்பினையும் தெளிவாக வர்ணிக்கின்றனர். இது ஹரிதாச சாகித்யத்தின் சிறப்பு.

ஹரிதாச சாகித்ய என்னும் சொல், கர்னாடக ஹரிதாச சாகித்யத்திற்கு மட்டுமே உரித்ததல்ல. தாச என்னும் சொல், புராண இதிகாசங்களில் அதிக முறை பயன்பட்டிருக்கிறது.

தாஸோஹம் கோஸலேந்திரஸ்ய ராமஸ்யாக்லிஷ்ட கர்மண: - என்று தாஸ ஸ்ரேஷ்டனான ஹனுமந்தன் சுந்தரகாண்டத்தில் பலமுறை சொல்லியிருக்கிறார். வேதவியாசரின் கிரந்தங்கள் வியாச சாகித்யங்கள். இந்த வியாசரின் கிரந்தங்களை ஆதாரமாக வைத்துக்கொண்டு, பிற்காலங்களில் அனேக ஞானிகளால் இயற்றப்பட்ட கிரந்தங்கள் அனைத்தும் தாச

சாகித்யங்களே. ஆசார்ய மத்வர் பற்பல கிரந்தங்களை இயற்றியிருந்தாலும், புகழ்பெற்ற அவரது கிரந்தங்கள் – 37. இந்த 37 என்னும் எண்ணிக்கை சிறப்பான அர்த்தத்தை பெற்றிருக்கிறது.

இந்தியர்களில் எண்கணித சாஸ்திரத்திற்கு அதிக மதிப்பு கொடுக்கின்றனர். எண்களால் விஷயத்தை குறிப்பாக சொல்வது ஒரு சம்பிரதாயம். மகாபாரதம் முழுவதும் 18 என்னும் எண்ணால் இருக்கிறது. ராமாயணத்திற்கு 7 என்னும் எண் இருக்கிறது. கோரேபாள் ஹனுமந்தராயரே முதலான ஞானிகள், ஆசார்ய மத்வரின் புகழ்பெற்ற கிரந்தங்களை குறிப்பதான 37 என்னும் எண்ணினால், ஆசார்யர் தாசர் என்றும், அவரின் கிரந்தங்கள் தாச சாகித்யங்கள் என்று சொல்கிறார். 3 என்பது த என்பதை குறிக்கிறது. 7 என்பது (ய,ர,ல,வ,ஷ1,ஷ2,ஸ,ஹ என்னும் வரிசையில்) ஸ என்பதை குறிக்கிறது. இவற்றை சேர்த்தால், தாஸ என்னும் சொல் வருகிறது. இதே தாஸ சொல், பின்னோக்கிப் படித்தால், ஸதா ஆகிறது. இதனால், ஆசார்யர் எப்போதும் ஹரிதாசர் என்றும், அவரின் மொத்த சாகித்யம், தாஸ சாகித்யம் என்றும் தெளிவாகிறது.

ஹரிதாச சாகித்யம், த்வைத சம்பிரதாயத்தை பின்பற்றி இருந்தாலும், அது தன் ஒளியை அனைத்து திசைகளிலும் வீசியிருக்கிறது. இந்த சாகித்யத்தில் வெறும் வேதாந்த விஷயங்கள் மட்டும் அல்லாமல், பாமர மக்களையும் நல்வழியில் நடத்தி, பகவந்தனிடம் அவனது மனதினை இழுக்கத் தேவையான அனைத்து சாதனைகளை தெளிவாக கூறுகிறது. இந்த தாச சாகித்யத்தின் முக்கிய குறிக்கோள், தோஷங்கள் உள்ள இந்த கலியுகத்தின் சமூகத்தில் வாழ்ந்து, பல கஷ்டங்களைப் படும் ஜீவிக்கு, இதமான வழியில் சுலபமாக பின்பற்றுவதற்கான தகுதியுள்ள தர்மங்களை சொல்லியவாறு, ஸார-அஸார பதார்த்தங்களின் செயல்களை ஆதாரத்துடன் விளக்கி, ஜீவனின் மனதினை தூய்மை அடையச் செய்து, அங்கு ஹரிபக்தியின் விதையை நட்டு, முக்தி மார்க்கத்தில் அவனை சேர்க்கிறது.

நரஹரி தீர்த்தரில் துவங்கி விஜயதாசர் வரைக்கும் வந்த காலம், துவக்க காலம் எனப்படுகிறது. விஜயதாசரில் துவங்கி பிராணேஷ தாசர் வரைக்கும் உள்ள காலம் இரண்டாம் காலம் என்றும் பிராணேஷ தாசரில் துவங்கி, சுந்தர தாசர் வரைக்கும் இருக்கும் காலம் மூன்றாம் காலம் என்றும் அழைக்கப்படுகிறது.

இந்த மூன்று காலங்களில், ஹரிதாச சாகித்யத்தை, மூன்று ஆசிரமத்தைச் சேர்ந்த ஞானிகளும் போற்றி வளர்த்து வந்திருக்கின்றனர். நரஹரி தீர்த்தரில் துவங்கி, வித்யா பிரசன்ன தீர்த்தர் வரைக்கும், இருப்பவர் அனைவரும் யதிகள். இவர்கள் அனைவரும் யதி ஆசிரமத்தில் இருந்து, பீடாதிபதி எனப்பட்டவர்கள். த்வைத சித்தாந்த பிரதிஷ்டாபனைக்காக சம்ஸ்கிருதத்தில் வேதாந்த கிரந்தங்களை இயற்றியவாறு, இன்னொரு புறத்தில், பாமர மக்களுக்காக கன்னடத்தில் கிருதிகளை இயற்றி, தாச சாகித்யத்தின் பெருமையை வளர்த்தனர். புரந்தரதாசர், கனகதாசர், மஹிபதி தாசர், பிரசன்ன வெங்கட தாசர், விஜயதாசரே முதலானவர்கள் கிருஹஸ்தர்கள். கோபாலதாசரே முதலானவர்கள் பிரம்மசாரிகள். இவர்கள் அனைவரும் மஹாஞானிகள். பண்டிதர்கள். வியாசராஜர், வரதேந்திரர் ஆகியோர் யதி ஆசிரமத்தில் இருந்து, சமூகத்தின் வளர்ச்சிக்காக பாடுபட்டு, கன்னட கிருதிகளால் தாச சாகித்யத்தை உத்தம நிலைக்கு ஏற்றிவிட்ட மகான்கள்.

முதலாம் கட்டத்தைச் சேர்ந்த மகாமகிமரே, பிரசன்ன வெங்கட தாசர். ஸ்ரீனிவாசனிடமிருந்தே அருள் பெற்று, அவனிடமிருந்தே அங்கிதம் பெற்று, ஹரிதாச மணிமாலையில் ஒரு பதக்கமாக ஜொலித்து வாழ்ந்த ஒரு தன்ய ஜீவிகள்.

# தாசரின் வாழ்க்கையே ஒரு வேதாந்த செய்தி ஆகும்

சாத்விக ராஜஸ தாமஸ என்று ஜீவர்கள் மூன்று விதங்கள் ஆவர். சாத்விக ஜீவர்கள் நற்குணங்கள் நிறைந்தவர்களாக, ஞான வைராக்ய பக்திகளை வளர்த்துக்கொண்டு, சமூகத்தில் நல்ல மனிதர்கள் என்று பெயர் பெற்று, பகவத் அருளைப் பெற்று, கடைசியில் மோட்சத்தை அடைகின்றனர். இதற்கு எதிர்ப்பதமான வர்கள், தமோ ஜீவிகள். இவர்கள் சமூகத்திற்கு பிரச்னை கொடுப்பவர்களாக, நிரந்தரமாக பகவந்தனையும், தர்மத்தையும் எதிர்த்தவாறு, பண்பாடு, சம்பிரதாயம் நற்செயல்களிலிருந்து தூரம் இருந்து, கடைசியில் அந்தந்தமஸ்ஸினை அடைகிறார்கள். இதனை ஸ்ரீகிருஷ்ணன், பகவத்கீதையில் 'மாம் த்விஷந்த: .. மாம் அப்ராப்யைவ தே யாந்தி அதமாம் கதிம்' என்று கூறுகிறான்.

ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் அஸ்ருஜ்ய (இன்னும் வரையறுக்கப் படாத) நிலையில் உள்ள சாத்விக ஜீவி, பகவந்தனின் அருளைப் பெற்று ஸ்ருஷ்டிக்கு வருகிறான். பசு, பறை ஆகிய அனேக யோனிகளில் சஞ்சரித்தவாறு ஒரு சுபமுகூர்த்தத்தில் சாதனைக்கு ஏற்ற மானிட சரீரத்தைப் பெறுகிறான். அப்போது பகவத் இச்சை யிலிருந்து விலகாமல், கஷ்ட துக்கங்களை அனுபவித்தவாறு நகர்கிறான். கடைசியில் ஒரு நாள், ஹரிகுருகளின் அருளால் பூர்ண விரக்தனாகி, சம்சாரத்தை விட்டு, பகவந்தனை தேடியவாறு இருக்கிறான். குருகளின் தரிசனத்தினால் சஜ்ஜனர்களின் சகவாசத்தில் ஜீவன்முக்தன் ஆகிறான். இது சாதக ஜீவியின் பாதையாகும்.

பிரசன்ன வெங்கட தாசரின் வாழ்க்கை, சாதக ஜீவியின் வாழ்க்கைக்கு சரியான உதாரணமாக இருக்கிறது. சாத்விக ஜீவியின் மேல் பகவந்தனின் அருள் வருவதைப் பற்றி, அது படிப்படியாக வளர்ந்து, கடைசியில் ஜீவியை உயர்ந்த நிலைக்கு கொண்டுச் செல்லும் வழியையும், ராம கிருஷ்ணரின் கதையில் வரும் அகலிகை மற்றும் குப்ஜையின் கதைகளையும் உதாரணமாகக் கொடுத்து அற்புதமாக விளக்குகிறார், வரதேஷ விட்டலர்.

ஷிலெய பாதரஜதி ஸ்த்ரி மாடித
ஸுலலித குணநிதி ராமஹரே
பலுவக்ராகித்த பலெய க்ஷணதலி
சலுவெய மாடித கிருஷ்ண ஹரே

இந்த சரணத்தில், த்ரேதா மற்றும் த்வாபரங்களுக்கு சம்பந்தப்பட்ட இரு கதைகள் சொல்லப்படுகின்றன. ஒன்று, ராமனின் கருணைக்கு பாத்திரரான அகலிகையின் கதை. இன்னொன்று, நிரந்தர கிருஷ்ண தியானத்தில் காலத்தைக் கழித்த குப்ஜையின் கதை. அகலிகை கல்லாக இருந்தாள். கல்-ரூபம், சாதனைக்கு ஏற்றதல்ல. அங்கு சாதனை இல்லை. ராமனின் பாத ஸ்பர்ஷத்தினால், அந்த கல்லிற்கு சாதனைக்கு ஏற்றதான சரீரம் கிடைத்தது.

சாதன சரீரம் வந்தாலும் குப்ஜைக்கு, அது குரூபமாக, கம்சனைப் போல துஷ்டரைப் போல இருந்தது. ஆனால், ஸ்வாமியின் சங்கல்பத்தைப் போல, குப்ஜை குரூபியாக இருந்தாலும், துஷ்ட கம்சனின் அரசில் இருந்தாலும், கிருஷ்ணனின் சிந்தனையில் காலத்தை கழித்து வந்தாள். கிருஷ்ணனே அவள் இருந்த இடத்திற்கு வந்து, அவளை சுந்தரியாக மாற்றி, தன்னவளாக ஆக்கிக் கொண்டான்.

இதுவே சாதகஜீவியின் வழியாகும். சாத்விக ஜீவி, அஸ்ருஜ்ய காலத்தில் (ஸ்ருஷ்டிக்கு வருவதற்கு முன்), சாதனைக்கு தக்கதான சரீரத்தைப் பெற்று, கல்லினைப் போல வெறும் மூச்சு விடுவதை மட்டும் செய்தவாறு இருக்கிறான். அத்தகைய ஜீவி, பகவந்தனின் அருட்பார்வையைப் பெற்று, அவனின் அருளால் ஸ்ருஷ்டிக்கு வந்து, சாதன சரீரத்தைப் பெறுகிறான். ராமனின் அருளால் கல்லாக இருந்த அகலிகை, பெண் ஆகிறாள். அதைப்போலவே, ஸ்ருஷ்டிக்கு வந்து

ஜீவி சாதன சரீரத்தைப் பெற்றிருந்தாலும், காம க்ரோதாதிகளாலும், சம்சார பந்தனங்களாலும், சுக துக்காதிகளை அனுபவித்தவாறு, கம்சனின் அரசாட்சியில் குரூபியாக இருந்த குப்ஜையைப் போல இருக்கிறான்.

பகவந்தனின் அருளால் சம்சாரத்தில் இருந்தாலும், கம்சாரியையே எப்போதும் நினைத்தவாறு, அவனின் பார்வையைப் பெறுவதற்காக குப்ஜையைப் போல ஏங்கிக் கொண்டிருக்கிறான். குப்ஜைக்கு கிருஷ்ணனின் ஸ்பர்ஷம் கிடைத்ததைப் போல, எப்போதும் பகவந்தனின் சிந்தனையில் காலத்தை கழித்தவாறு சாத்விக ஜீவிக்கும் ஒரு நல்ல நாளில் ஸ்ரீஹரியின் தரிசனாதிகள் கிடைத்து, தன்யன் ஆகிறான்.

ஒரு நல்ல காரணத்திற்காக பிறப்பெடுத்த பிரசன்ன வெங்கட தாசர், ஸ்ரீஷனின் அருளால் கர்மபூமி எனப்படும் பவித்ர பாரதத்தில் பிறந்தார். சம்சார பந்தனத்திற்கு கட்டுப்பட்டிருந்தாலும், இவர் காம, க்ரோதாதிகளை விட்டிருந்தார். அண்ணனின் மனைவியே இவருக்கு காம, க்ரோதங்களின் ஸ்வரூபளாக இருந்தார். சுக துக்கங்களின் நடுவில் இருந்தார். மனம் மட்டும் பகவந்தனை மறக்கவில்லை. சிறு வயதிலிருந்தே பகவந்தனிடம் பக்தி இருந்தது. ஒரு நல்ல நாள் வந்தது. அண்ணியின் கோபமே பிரசன்ன வெங்கடரில் வைராக்கியத்தை வளர்த்தது. சம்சாரத்தில் விரக்தி, பகவந்தனின் ரக்தி உண்டாயிற்று. பகவந்தனுக்காக மனம் அலைந்தது. மந்திராலய குருகளின் வழிகாட்டுதலில் ஸ்ரீனிவாசனின் நித்ய சன்னிதானம் இருக்கும், பூவைகுண்டம் எனப்படும் வெங்கடாத்ரிக்கு வந்தார். ஸ்ரீனிவாசாபின்ன பிம்பனின் தரிசனம் ஆயிற்று. ஜீவன் முக்தர் ஆனார். பகவத்பக்தரின் நடை உடை பாவனைகள் அனைத்தும், நற்செய்தியாக தத்வபோதனைகள் ஆயின.

## பிரசன்ன வெங்கடரின் சாஹித்ய வைபவம்

தாச சாகித்ய அபிமானிகள் இழந்த தாச சாகித்ய செல்வங்கள் அபாரமானவை. அடைந்தது (கிடைத்தது) மிகவும் குறைவே. புரந்தரதாசர் இயற்றிய கீர்த்தனைகளின் எண்ணிக்கை 375,000 ஆகும். அவற்றில் இன்று கிடைப்பதோ 9,000க்கும் குறைவே. இதைப்போலவே பிரசன்ன வெங்கடரின் சாகித்யமும், நாளடைவில் தொலைந்து போயிருக்கலாம். பகவந்தனின் அருள் என்று சொல்வதைப் போல, பாகவத 10ம் ஸ்கந்தத்தின் பூர்வார்த்தத்தின் உரை மட்டும் முழுமையாக கிடைத்துள்ளது. தாசர், கீர்த்தனை, சுளாதி, உகாபோக முதலான அனைத்து வகைகளையும் வளர்த்து, சமூகத்திற்கு நல் அறிவுரைகளை வழங்கினார். சுப்ரபாதத்திலிருந்து துவங்கி, லாலிசேவை வரைக்கும் இருக்கும் பகவந்தனின் அனைத்து சேவா விதானங்களையும், தாசர் தம் கிருதிகளில் பாடியிருக்கிறார். இந்த சேவைகளின் உள் அர்த்தங்களையும் நமக்கு புரியுமாறு செய்திருக்கிறார்.

ஆன்மீக, தாரதம்ய, நவவித பக்திகள், பகவந்தனின் பற்பல அவதாரங்களின் வர்ணனை, கிருஷ்ணனின் கீர்த்தனைகளில் ஆத்யாத்ம சிந்தனை என சாதனைக்குத் தேவையான அனைத்து விஷயங்களையும் தாசார்யர் தம் கிருதிகளில் நிரப்பியிருக்கிறார்.

## ஸுப்ரபாதம்

ஆனந்ததீர்த்த பகவத்பாதர் பரபிரம்ம நாராயணனை அனந்தகல்யாண குணபரிபூர்ணன் என்றும், தோஷதூரன் என்று சொல்கிறார். 'நாராயணம் குணை: ஸர்வை: உதீர்ணம் தோஷவர்ஜிதம்'. பகவந்தனின் உபாசனைக்கு குணபரிபூர்ணத்வ ஞானம் மட்டும் போதாது. அவன் தோஷங்களிலிருந்து மிகவும் தூரமாக விலகியிருக்கிறான் என்னும் ஞானமும் தேவை. அனந்ததோஷங்களில் தூக்கம்கூட ஒன்று ஆகும். பக்தர்கள் பகவந்தனுக்கு பக்தியுடன் சமர்ப்பிக்கும் இரவு நேர சேவை. உதயத்தின் சுப்ரபாத சேவைகள், ஒரு விதத்தில் பகவந்தனிடம் தோஷத்தை சொல்வதே ஆகும். சிரம பரிகாரத்திற்கு தூக்கம். சோர்வு குறைந்தபோது விழிப்பு.

ஆனால், பகவந்தனுக்கு சோர்வு உண்டாகியிருக்கிறது என்று தாசர் லாலி பாடுவதில்லை. இதைப் போலவே, பகவந்தன், ஸ்ருஷ்டி, ஸ்திதிகளை எப்போதும் செய்து சோர்ந்து தூங்கியிருக்கிறான். அவனை எழுப்பவேண்டும் என்ற நோக்கத்தில் தாசர் பகவந்தனை சுப்ரபாதம் சொல்லி எழுப்புவதில்லை.

'பகவந்தனே. நீ அனந்தகல்யாண குணபரிபூர்ணன். உன் மகிமைகள் அனந்தமானவை. உன் அவதாரங்களின் சிறப்பு என் மனவசனங்களுக்கு தூரமானவை. அந்தரங்கத்தில் தோன்றிய இந்த பாவனைகளை சொல்வதற்காக, லாலிசேவை துவங்கியது. இதைப்போல, சுப்ரபாத சேவைகூட பகவந்தனை எழுப்புவதற்காக அல்ல. சுப்ரபாதத்தின் பின்னணியில் பக்தனின் பிரார்த்தனை நிரம்பியிருக்கிறது. 'ஹே பகவந்தனே, தினமும் அருணோதயம் ஆகிறது. சூரியன் உதிக்கிறான். இருட்டினை விரட்டி ஒளி பாய்ச்சுகிறான். ஆனால், இது எனக்கு முக்கியமல்ல. என் இதயத்தில் அஞ்ஞானம் எனும் இருட்டு நிரம்பியிருக்கிறது. இங்கு உன் அன்பு என்னும் அருணோதயம் ஆவது என்று? சுஷுப்தி, ஸ்வப்ன, ஜாக்ருத என்னும் நிலைகளுக்கு காரணமான ப்ராக்ஞ, தைஜஸ, விஷ்வ ஆகிய ரூபங்களிலிருந்து பின்னனான ஹே நாராயணனே, அஞ்ஞானம் என்னும் இருட்டினால் நிரம்பியிருக்கும் என் இதயத்தில், ஞானத்தை வளர்த்து, பக்தர்கள் சூரியனின் கிரணங்களை செலுத்துவதாக அருள்வாயாக. இதற்காக எழுவாயாக'.

இந்த பிரார்த்தனையே சுப்ரபாதத்தின் உண்மையான அர்த்தம். இந்த பாவத்தையே ஆதிகவியான வால்மிகி தன் சுப்ரபாத ரூபம் எனப்படும் அமிர்தமணிமாலையில் கூறியிருக்கிறார்.

கௌஸல்யா சுப்ரஜா ராம பூர்வாசந்த்யா பிரவர்த்ததே
உத்திஷ்ட நரஷார்த்தூல கர்தவ்யம் தெய்வமான்ஹிகம்

இது ராமனுக்காக கவி வால்மிகி பாடிய சுப்ரபாத கீதம்.

புருஷோத்தமனான ஸ்ரீராமா! உன் அருளால் என் இதயத்தில் பக்தி பிறந்திருக்கிறது. (நவஷார்த்தூல கௌஸல்யாசுப்ரஜா ராம பூர்வாஸந்த்யா ப்ரவர்த்ததே'. வெளிச்சத்தால் நிரம்பிய பகலைப்போல இருக்கும் என் ஞானமயமான ஜீவனத்தில், உனக்கு சம்பந்தப்பட்ட நற்கர்மங்களை நீ செய்து செய்விப்பாயாக. இதற்காக எழுவாயாக. (தெய்வம் அன்ஹிகம் கர்தவ்யம்).

இதே அர்த்தத்தில் புரந்தரதாசரும்:

ஏளு நாராயண ஏளு லட்சுமி ரமண
ஏளு ஸ்ரீகிரியொடெய வெங்கடேஷ
காஸித்த ஹாலுகள காவடிய தும்பிட்டு
லேஸாகி கெனெ மொசரு பெண்ணெயனெ மெத்து
சேஷஷயனனெ ஏளு ஸமுத்ர மதனவ மாடு
தேஷ கெம்பாயிதோ ஏளய்யா ஹரியே
...
அரவிந்த லோசனனெ கோளி கூகிது கேளு
புரந்தர விட்டலனெ பௌகாயிது ||

என்று பாடி பகவந்தனுக்கு பிரார்த்தனா ரூபத்தில் சுப்ரபாத சேவையை சமர்ப்பிக்கிறார். தற்போது கிடைக்கும் பிரசன்ன வெங்கட தாசரின் சாகித்யத்தில், பகவந்தனுக்கு சமர்ப்பித்த மூன்று சுப்ரபாத கீர்த்தனைகள், ராகவேந்திர ஸ்வாமிகளுக்கு சமர்ப்பித்த ஒரு சுப்ரபாத கீதையும் கிடைக்கிறது. பகவந்தனுக்கு சம்பந்தப்பட்ட உதயராக கீதைகள், தாச சாகித்யத்தில் அதிகமாக கிடைக்கின்றன. ராகவேந்திர ஸ்வாமிகளுக்கு சம்பந்தப்பட்ட இரு உதயராக கீதங்கள் மட்டும் கிடைக்கின்றன. இதில் முதலாவது பிரசன்ன வெங்கட தாசருடையது என்றால், இரண்டாவது

குருஜகன்னாததாசர் இயற்றிய உதயராக பாடல். ராகவேந்திரரின் மேல் முதன்முதலில் சுப்ரபாத கீதையை இயற்றிய புகழ் பிரசன்ன வெங்கட தாசரையே சேரும்.

உத்பவடிஸய்ய கிருஷ்ண ||ப

உத்பவடிஸை பொம்மனப்ப புவனாளியு
ஸ்பஷ்டனாதி த்ரயவனப்பெ பால்கடல மக
ளப்பி அஹிவரன ஸுப்பத்திகெலி ஒர
கிப்ப திம்மப்ப வ்ரஜதி தயதி ||அப

பகவந்தன் கருணையுடன் அளித்த சாதன ஷரீரத்தை சாதகஜீவி, அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு பகவந்தன் கருணையுடன் கண் திறந்து பார்க்க வேண்டும். பகவந்தனின் அருள் கிடைத்தால் மட்டுமே, இந்த சாதன சரீரத்தின், சரீரத்தினை அண்டி நிற்கும் 24 தத்வங்களின், அவற்றிற்கு அபிமானிகளான தேவதைகளின், அந்த தத்வாபிமானி தேவதைகளின் மூலம் தன்னை வழிநடத்துபவனான பகவந்தனின் விவரங்கள் தெரிய வருகின்றன. இதற்காக பகவந்தனிடம் பிரார்த்தனை செய்ய வேண்டும். இந்த பிரார்த்தனை ரூபங்களே உதயராக கீர்த்தனைகள்.

இந்த பதத்தின் பல்லவியில் தாசர் பயன்படுத்தியிருக்கும் கிருஷ்ண சொல், நந்தகோப குமாரனை குறிப்பிட்டால், அது பிம்பரூபி பகவந்தனையும் குறிக்கிறது. அனைத்து சாத்விக சேதனர்களையும் தன் ரூப குண க்ரியைகளால் ஈர்த்து, முக்திக்கு அழைத்துக் கொள்பவனான காரணத்தால், பிம்பனும்கூட கிருஷ்ணனே ஆகிறான்.

ஹே பிம்பமூர்த்தியே எழுந்திரு. அருள்பவனாகு. இதயாகாஷத்தில் அடங்கியிருக்கும் அஞ்ஞான என்னும் தமஸ்ஸினை ஓட்டு. இது தாசரின் பிரார்த்தனை. பல்லவியின் நிஜ அர்த்தம் – சதுர்முக பிரம்மன், சகல ஜீவர்களுக்கும் அபிமானி. ஜீவோத்தமரான வாயுதேவர் பகவத் சேவாரூபத்தில் ஹம்ஸ மந்திரத்தை ஜெபித்தவாறு, மூச்சு விடும் செயல்களை செய்து, ஜீவியின் வாழ்க்கைக்கு முக்கிய காரணன் ஆகிறார். அனைத்து வேதாபிமானினியும், வித்யார்த்தி தேவதையுமான மஹாலட்சுமி, பகவந்தனின் அணைப்பில் படுத்து அந்தர்முகியாக இருக்கிறாள். இதனால், ஜீவி பகவத்சம்பந்த ஞானத்தினால் தூர இருக்கிறான். மஹாலட்சுமி, பஹிர்முகியாக இருந்தால் மட்டுமே ஜீவிக்கு ஞானோதயம் ஆகிறது. இது பகவந்தனின் அருளால் மட்டுமே சாத்தியம். பிரம்ம வாயுகளுக்கு தந்தையும், வழி நடத்துபவனும் ஆன பரபிரம்மன், ரமாதேவியை அணைத்துக்கொண்டு படுத்திருப்பனைப் போல, ஜீவியை அருளாமல் இருக்கிறான். இத்தகைய பகவந்தன் எழவேண்டும். லட்சுமிக்கு ப்ரேரணை கொடுத்து, அவள் மூலமாக சாதக ஜீவியில் ஞானத்தை நிரப்பவேண்டும். அப்போது மட்டுமே, ஜீவியின் மேம்பாடு ஆகிறது. இந்த அனைத்தையும் மனதில் வைத்துக் கொண்ட பிரசன்ன வெங்கட தாசர், கீர்த்தனையின் துவக்கத்தில் இருக்கும் பல்லவி, அனுபல்லவிகளில் பிம்பனை பிரார்த்திக்கிறார்.

பிம்பரூபி பகவந்தன், அருள்வதற்காக எழுந்தால், ஆகும் அடுத்த செயல்களை தாசர் முதலாம் சரணத்தில் குறிப்பிடுகிறார்.
அருண மூடண வெரெ த்வரித தமகுலஜாரெ
ஹரிதவப்ரத தாரெ தரணிகர பளி ஸாரெ

ஸரஸிஜ விகஸதொரெ மருத பரிமள பேரெ நெரெது அளிஜேங்கரிஸுதிரெ
ஹருஷ திவிஜகண பேரெ மொரெயுதிவெ ஸுரபேரி
பரமஹம்ஸரு மேரெ மரெது ஸ்மரிஸுதலெய்தாரெ
ஸர்வவேத கோஷ ஹரிஷரவெனுத லைதாரெ கருணதலி நோடு ஷௌரெ

ஏனம் மோசயாமி – இவனை அருள்கிறேன் என்று பிம்பன் நினைத்தால் மட்டுமே ஜீவி ஹ்ருதய என்னும் கிழக்கு, சிவக்கிறது. அஞ்ஞான என்னும் இருட்டு தானாகவே வெளியேறுகிறது. அதுவரை புத்தி என்னும் ஆகாஷத்தில் வியாபித்த சந்தேக நட்சத்திரங்கள் தாமாகவே விலகுகின்றன. ஞானத்தின் கிரணங்கள் வியாபிக்கின்றன. ஹ்ருதய கமலம் மலர்கிறது. வாயுமதத்தின் புகழ் அனைத்து இடத்திலும் பரவுகிறது. இந்திரியங்கள் என்னும் தும்பிகள் பகவந்தனை சுற்றுகிறது. தத்வாபிமானி தேவதைகள் மகிழ்ச்சியுடன் சாதக ஜீவியை ஆசிர்வதிக்கின்றனர்.

சாதக ஜீவியின் முகத்திலிருந்து முரசு ஒலியைப் போல, 'ஹரே நாராயணா முகுந்தா' என்னும் சொற்கள் வெளிவருகின்றன. குருகள் மகிழ்ச்சியுடன் பூரிக்கிறார். நிரந்தரமாக வாயிலிருந்து ஹரிசர்வோத்தமத்வ ப்ரதிபாதகளான வேதவாணிகள் சொல்லப்படுகின்றன. இதற்காக பிம்பாபின்னனான ஹே கிருஷ்ணா அருள்வாயாக. எழுந்திரு. எனக்கு உன் அருட்பார்வையைக் கொடுத்து அருள்வாயாக – என்று தாசர் பிரார்த்திக்கிறார்.

இதைப்போல அடுத்து வரும் சரணங்களும்கூட ஆத்யாத்ம அர்த்தத்தில் திறக்கின்றன. பார்க்கும் கண் நமதாக வேண்டும். பிரசன்ன வெங்கட தாசரின் பாதங்களை நம்பி, மனமுருகி கீர்த்தனைகளை பாடவேண்டும்.

## தாரதம்ய

ஆசார்ய மத்வர், பஞ்சபேத தாரதம்யத்திற்கு அதிக மதிப்பு கொடுத்திருக்கிறார். ஹரிசர்வோத்தமத்வ ஞானம் எவ்வளவு முக்கியமோ, பஞ்சபேத தாரதம்ய ஞானமும்கூட அவ்வளவே முக்கியமானதாகும். ஆசார்யர் தம் தாத்பர்ய நிர்ணயத்தில்:

தாரதம்யம் ததோ ஞேயம் ஸர்வோச்சத்வம் ஹரேஸ்ததா
ஏதத்வினா நகஸ்யாபி விமுக்தி: ஸ்யாத் கதஞ்சன
பஞ்ச்பேதாஸ்ச விக்ஞேயா: விஷ்ணோ: ஸ்வாபேதமேவ ச
நிர்தோஷத்வம் குணோத்ரேகம் ஞாத்வா முக்தி: நஜான்யதா

என்று கூறி, இதனை தெளிவுபடுத்துகிறார். அணுபாஷ்யத்திலும் கூட 'தத்பக்தி தாரதம்யேன தாரதம்யம் விமுக்திகம்' என்று கூறி, மேற்சொன்ன விஷயத்தையே விளக்குகிறார். புரந்தரதாசாதி அனைத்து ஹரிதாசர்களும் இந்த தாரதம்யத்திற்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்திருக்கின்றனர்.

எந்தெந்து முகுதிய பேகெம்பவர்க்கெ
அந்ததி ஜீவர தாரதம்யவ திளிபுது
குருபுரந்தரவிட்டலா முகுதிய நீவ
(குருபுரந்தரதாசர்)

தாரதம்யவே திளிது நடெதா விஷிஷ்டரிகெ
பாரு மாடுவ வத்ஸவிஜயவிட்டலரேய
(விஜயதாசர்)

தேவதைத்யர தாரதம்யவ
நீவிததி திளிவெல்லரொளு ல
க்ஷ்மீவரனெ ஸர்வோத்தமனு எந்தெந்து நித்யதலி
ஸேவிஸுவ பக்தரிகொலிது ஸுக
வித ஸர்வத்ரதலி ஸுகமய
ஸ்ரீவிரிஞ்சாத்யமரனுத ஜகன்னாதவிட்டலனு || (ஜகன்னாத தாசர்)

இவ்வாறு ஹரிதாசர்கள் அனைவரும், ஆசார்ய மத்வர் சொல்லிக் கொடுத்த தாரதம்யத்திற்கு ஏற்ப கிருதிகளை இயற்றினர். பழைய ஹரிதாசர்களின் சாகித்யத்தை ஆராய்ச்சி செய்தால், ஸ்ரீபுரந்தரதாசரே முதன்முதலில் இதை குறிப்பால் உணர்த்தியதாக தெரிகிறது.

'ஸதத கணநாத ஸித்திய நீவ கார்யதலி'

'ஸத்ய ஜககிது பஞ்சபேதவு நித்ய ஸ்ரீகோவிந்தன'

புரந்தரதாசரின் இந்த இரு கிருதிகள் தாரதம்யத்தை விளக்கும்படியாக இருக்கின்றன.

இந்த புத்தகத்தின் கதாநாயகரான பிரசன்ன வெங்கட தாசரும், தாரதம்யத்தை விளக்குவதாக பல கீர்த்தனைகளை இயற்றியிரு க்கிறார். தற்போது கிடைக்கும் தாசரின் கீர்த்தனைகளில், லட்சுமி, வாயு, ருத்ர, துளசி, சுப்ரமண்ய, கிருஷ்ணவேணி வரைக்கும் சம்பந்தப்பட்ட அனேக கீர்த்தனைகள் கிடைக்கின்றன. இந்த அனைத்து கிருதிகளிலும் தாரதம்யம் நன்றாக விளக்கப்பட்டுள்ளன.

## ஸதாசாரம்

மனிதப்பிறவியை அர்த்தமுள்ளதாக ஆக்குதல்

மானவ ஜென்ம தொட்டது - இத ஹானி மாடலி பேடி ஹுச்சப்பகளிரா - இது புரந்தரதாசரின் செய்தி. இந்த வசனம் இரு அர்த்தங்களைக் கொண்டது. ஒன்று, மானவ ஜென்மத்தின் சிறப்பினை சொல்கிறது. இன்னொன்று அதன் சாதனையின்பால் நமது கவனம் இருக்கவேண்டும் என்று எச்சரிக்கிறது. விக்ஞானிகளின் பார்வையிலும் மானவ சரீரம் மிகவும் விலைமதிப்பற்றது. இந்த தேகம் எவ்வளவு அபூர்வமானதோ, அவ்வளவே தற்காலிகமானதும் ஆகும்.

நீரபொப்பளெயந்தெ நித்யவல்லவோ ஈ தேஹ

தற்காலிகம் எனப்படும் மிகச்சிறந்ததான இந்த சரீரத்தை அர்த்தமுள்ளதாக ஆக்க முயலவேண்டும்.

ஆஹார நித்ரா பய மைதுனானி
ஸாமான்யமேதத் பஷுபிர் நராணாம்

ஆகாரம், தூக்கம், மைதுனங்கள் ஆகியவை அனைத்து பிராணிகளுக்கும் பொதுவானவை. மனிதன், அனைத்து பிராணிகளைவிடவும் அறிவுள்ளவன் என்று அழைக்கப்படுகிறான். இவனுக்கு அனைத்தையும் ஆராய்ந்து பார்க்கும் பகுத்தறிவினை பகவந்தன் கருணையுடன் அளித்திருக்கிறான். கண் இருந்தாலும் குருடராய், நாம் கிணற்றில் விழுந்துவிடக்கூடாது. சமூகத்தில் மதிப்புடனான வாழ்க்கையை நடத்தி, தம்மையும் மேம்படுத்தியவாறு, சமூகத்திற்கும் வழிகாட்டியாக வாழவேண்டும் என்பது அறிவுஜீவியான மனிதனின் கடமை. இதற்காகவே பகவந்தன் மானுட சரீரத்தைக் கொடுத்திருக்கிறான். அதற்காகவே, ஞானிகள் அனைவரும் மானவ சரீரத்தை சாதன சரீரம் என்று கூறினர்.

வீட்டினை சுத்தம் செய்யாதவன், சாலையை, ஊரை சுத்தம் செய்யமுடியாது. சமூகத்திற்கு அறிவுரை கூறவேண்டுமெனில் முதலில் தான் தன்னை சுத்தமாக்கிக் கொள்ளவேண்டும். சதாசாரத்தை பின்பற்றுபவனாக இருக்கவேண்டும். இதுவே ஆத்மோத்தார எனப்படுகிறது.

அனாதி நித்ய எனப்படும் ஜீவர்கள், ஸ்ருஷ்டிக்கு வருவதற்கு முன்பு, ஜடர்களாக, கால பிரவாகத்தில் நீந்தியவாறு இருக்கிறார்கள். சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனும், சர்வோத்தமனும், சர்வக்ஞ சிகாமணியும், ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அக்ஞான, பந்த, மோட்சாதிகளுக்கு காரணனும், அனைத்தையும்விட ஸ்னேஹ, த்வேஷ, உதாசீனங்களிலிருந்து தூரனாக,

கருணைக்கடலான பகவந்தன், ஸ்ருஷ்டிக்கு வருவதற்கு முன்னர் இருக்கும் ஜீவரில் கருணையைக் காட்டி, அவரவர்களின் ஸ்வரூபபூத யோக்யதைகளை அனுசரித்து கதிகளைக் கொடுப்பதற்காக அவர்களை ஸ்ருஷ்டிக்கு கொண்டு வருகிறார். சாதனைக்கு தக்கதான தச-இந்திரியங்களால் கூடிய அழகான தேகத்தை அருளினார். ஜீவர்களின் சாதனைக்கு ஏற்ற 24 தத்வங்களால் கூடிய பிரம்மாண்டத்தை படைத்தார். பகவந்தன் அருளிக் கொடுத்த இந்த அனைத்து சாதன விஷயங்களை பயன்படுத்திக்கொண்டு, ஜீவி, தன் முக்ய குரு எனப்படுபவனான, தன்னை ஸ்ருஷ்டிக்குக் கொண்டு வந்த அந்தராத்ம எனப்படும் பரபிரம்மனைக் காண்பதற்கு முயல வேண்டும்.

இதற்கு இரு வழிகள். ஒன்று, ஞான மார்க்கம். இன்னொன்று கர்ம மார்க்கம். ஞான கர்ம மார்க்கங்கள் இரண்டும், ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவையே. ஒன்றிலிருந்து மற்றொன்றை பிரிக்க முடியாது. ஞானம் இல்லாத கர்மம் சரியல்ல. இதைப்போலவே, சத்கர்ம ஆசரணை இல்லாத ஞானத்தை, சாதனை என்று சொல்லமுடியாது. அபரோக்ஷத்திற்கு பிறகும் சத்கர்ம ஆசரணை இருக்கிறது. இதை பகவந்தனே கீதையில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

நமே பார்த்தாஸ்தி கர்தவ்யம் த்ரிபுலோகேஷ கிஞ்சன
நானவாப்தமவாப்தவ்யம் வர்த ஏவ ச கர்மணி

அர்ஜுனா! எனக்கு கடமை என்று எதுவும் இல்லை. நான் ஆப்தகாமன். ஆனந்த ஸ்வரூபி. ஆனாலும், உலகத்தை திருத்துவதற்காக, நான் சத்கர்ம ஆசரணைகளில் ஈடுபடுகிறேன் - என்று கூறுகிறான். கர்மபூமி எனப்படும் இந்த பவித்ரமான பாரத தேசத்தில் பிறந்த அனைவரும், தனக்கு தக்க சத்கர்மங்களை செய்து, சதாசார சம்பன்னர் என்று அழைத்துக் கொள்ள வேண்டும்.

ஸ்ருதிகளில், ஸ்ம்ருதிகளில், தர்ம சாஸ்திர மற்றும் புராணங்களில் இந்த விஷயங்களின் விளக்கம் உள்ளது. இவற்றில் கூறிய ஆசார விசாரங்களில் சில, அந்தந்த காலத்திற்கு மட்டுமே பொருந்துவதாக இருந்தால், வேறு சில, அனைத்து காலங்களுக்கும் பொருந்துவதாக இருக்கின்றன. இந்த அனைத்தின் சாரத்தையும் எடுத்து, த்வைதமத ப்ரதிஷ்டாபனாசார்யரான ஆசார்ய மத்வர், தம் சதாசார ஸ்ம்ருதியில் கூறியிருக்கிறார்.

ஆசார்ய மத்வரின் இதயத்தை அறிந்த, பின்னர் வந்த ஞானிகள், அவற்றை மேலும் விளக்கமாகக் கூறி, சாதனைக்கு வழி ஏற்படுத்திக் கொடுத்தனர். ஆசார்யர் மத்வரின் வசனங்களின் உண்மையான அர்த்தத்தை சமூகத்திற்கு முழுமையாக, தெளிவாக, புரியும் வகையில் கூறினர் கர்னாடக ஹரிதாசர்கள். ஹரிதாசர்கள் கூறிய சதாசார, அவர்கள் கூறிய அனுஷ்டான பத்ததிகள், இன்றைய சமூகத்தில் லௌகிக வாழ்க்கையை நடத்தும் அனைத்து மனிதர்களுக்கும் வழிகாட்டியாக / கைவிளக்காக இருக்கிறது.

ஆசார்யர் சதாசாரத்தின் துவக்கத்தில் 'ஸ்ம்ருத்வாவிஷ்ணும்' என்று கூறி, அடுத்து செய்யவேண்டிய கர்மங்களின் பட்டியலைக் கொடுத்தவாறு, அவற்றை செய்ய வேண்டிய வகையையும் விளக்கியிருக்கிறார். 'விஷ்ணு' என்னும் சொல்லை, மிகவும் விஸ்தாரமாக பயன்படுத்தியிருக்கிறார் ஆசார்யர். அனைத்து இடங்களிலும் வியாப்தனான பகவந்தனுக்கு விஷ்ணு என்று பெயர். 'அடுத்து நான் சொல்லும் அனைத்து கர்மங்களிலும், வியாப்தனான பகவந்தனை நினைத்து கர்மங்களை செய்யுங்கள். பகவந்தனின் ஸ்மரணை இல்லாமல் செய்த கர்மங்கள் வீண் ஆகின்றன'. இது ஆசார்யரின் செய்தி. இதனை குறிப்பதற்காகவே சதாசாரத்தின் துவக்கத்தில் 'ஸ்ம்ருத்வா விஷ்ணும்' என்று கூறியிருக்கிறார். இதற்கு வியாக்யான ரூபத்தில் தம் த்வாதச ஸ்தோத்திரத்தின் மூன்றாம் அத்யாயத்தில் :

குரு புங்க்ஷ்வ ச கர்ம நிஜம் நியதம்
ஹரிபாத வினம்ர தியாஸததம் ||

என்று கூறுகிறார். செய்யவேண்டிய கர்மங்களில் பகவந்தன் வியாபித்திருக்கிறான். அந்த கர்மங்களை செய்யும் மனிதரிலும் ஸ்ரீஹரியே பிம்பனாக நின்று, தானே அனைத்தையும் செய்து செய்விக்கிறான். அனைத்து கர்மங்களில் பகவந்தனை தியானித்தவாறு, 'நான் அஸ்வதந்த்ரன், சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனான பகவந்தன் என்னில் நின்று எனக்கு யோக்யமான அனைத்து சத்கர்மங்களையும் தான் செய்து செய்விக்கிறான்' என்று சிந்திக்க வேண்டும். இந்த அனைத்து சிந்தனைகளையும் 'ஹரிபாத வினம்ரதியா' என்னும் வாக்கியத்தில் மத்வர் அடக்கியிருக்கிறார்.

இதையே ஜகன்னாததாசர்,

பொந்திகொண்டிஹ ஸர்வரொளு ஸம்
பந்தவாகதெ ஸகல கர்மவ
வரந்ததலி தா மாடி மாடிஸி தத்பலகளுணதெ (3-26)

ஏனு மாடுவ கர்மங்களு ல
க்ஷ்மி நிவாஸனிகர்ப்பிஸலு ஸன்
தானபூர்வகதிந்த ஸந்தேஹிஸதெ தினதினதி (5-38)

என்று கூறி, ஆசார்யரின் வாக்கியத்தை விளக்குகிறார். அதனால், காலையில் எழுந்ததிலிருந்து, இரவு படுக்கும் வரைக்கும் செய்யும் அனைத்து கர்மங்களிலும், ஹரிதாசர் சொல்லிக்கொடுத்த வழியில், பகவத் ரூபங்களை அர்த்த சகிதமாக அறிந்து, காலதேச நிலைமைகளுக்கேற்ப, இருக்கும் பொருட்களை வைத்துக்கொண்டு, கர்மயக்ஞங்களை செய்து, ஷுத்த அந்தːகரணன் ஆவதற்கு முயலவேண்டும்.

சதாசாரங்களைப் பற்றி பிரசன்ன வெங்கட தாசர் அதிக முக்கியத்துவம் கொடுத்திருக்கிறார். செய்ய வேண்டிய சதாசாரங்களின் பட்டியலை நேரடியாக கூறாவிட்டாலும், அந்தந்த வேளைக்கு செய்ய வேண்டிய ஷௌச ஸ்னானாதிகளை பகவத் ஸ்மரணையுடன், சாஸ்திரிய பத்ததியில் செய்யாதவன், மகா அபராதி என்றும், சதாசாரங்களை செய்யாதது மிகப்பெரிய தவறு என்றும் தெளிவாக கூறியிருக்கிறார். தம் அனேக கிருதிகளில், கண்டிப்பாக செய்ய வேண்டிய சதாசார சத்கர்மங்களை விளக்கியிருக்கிறார்.

தப்புகளெல்ல பரிஹரிஸுவ நம்மப்பனல்லவே நீனு
ஒப்பித பளிகமகுண நோடத திம்மப்பனல்லவே நீனு

என்னும் இந்த கீர்த்தனையில் தாசார்யர், உதயத்திலிருந்து இரவு வரை செய்ய வேண்டிய சதாசாரங்களை விவரிக்கிறார். எழுந்திருக்கும்போது நாராயண ஸ்மரணை, ஹரிஸ்மரணையுடன் ம்ருத்திகாஷௌச, துலசிபூஜை, கோ பூஜை, தக்க காலத்தில் சூரியனுக்கு அர்க்யம், ஸ்ரீஹரியின் குணங்களை சிந்தித்தல், பகவத் பக்தர்களின் ஆராதனை, ஹரிபாத சேவை, ஹரிமூர்த்தி தரிசனம், ஹரிகதா சிரவணம், நைவேத்ய சமர்ப்பணம், வைஷ்வானர ஹோமம், ஹரி நிர்மால்ய ஸ்வீகாரம், ஹரி நாம சங்கீர்த்தனை, ஹரி அர்ச்சனை, தீர்த்த க்ஷேத்திரங்களின் தரிசனம், கடையில் இரவில் அனுசந்தானத்துடன் வாம யக்ஞ ஆசரணை. இவை தாசர் கூறிய, கண்டிப்பாக செய்ய வேண்டிய சதாசாரங்கள்.

ஈகலோ இன்னாவாகலோ ஈகாத்ர அஸ்திரவண்ண -- என்னும் கிருதியில் தாசர் சதாசாரத்திற்குக் கொடுத்த இடம் அபூர்வமானது. ஆசாரஹீனனை வேதங்களும், தேவதைகளும் மன்னிப்பதில்லை.

ஆசார பிரதமோதர்மː தர்மஸ்ய பிரபுː அச்யுதː - ஆசாரமே உண்மையான தர்மம். சுத்தமான தர்மம். இந்த தர்மத்திற்கு ஸ்வாமி - நாராயணன். ஸ்ருதி ஸ்ம்ருதிகள் ஆசாரத்தை தெளிவாக வர்ணிக்கின்றன. அந்த ஸ்ருதி ஸ்ம்ருதிகள் ஸ்ரீஹரியின் ஆணை ரூபமான வடிவங்கள். சதாசாரத்திலிந்து விலகினால், ஹரியின் ஆணையை மீறியதாகவே அர்த்தம் ஆகிறது.

வேதங்களின் முக்கிய அம்சம் சதாசாரம். சதாசாரங்களை விளக்குவதான வேதபாகங்கள், வேதங்களுக்கு, முகப்பு போன்றதாகும். இது பிரசன்ன வெங்கட தாசரின் மனதிலிருந்து வந்த விஷயங்கள். இந்த அனைத்தையும் தாசார்யர்,

ஸகலாகம வேதோக்த விசாரக
முகவெனிஸுவுதாசார | ஆ
ஸுகவே தர்மத ஸார |
அகிலகெ ப்ரபு யதவீரா
புகுதவத்ஸல ப்ரசன்வெங்கடாயனா
ஸகவிடிதரெ பவதூர மனுஜ ||

என்னும் இந்த சரணத்தில் தெளிவுபடுத்தியிருக்கிறார்.

## பக்தியின் பவ்ய ஸ்வரூபம்

பக்த பக்த ஸுபாஷேன பத்தஸத்பாத பங்கஜம் – என்னும் ஆதித்ய புராண வசனத்தைப் போல, பகவந்தன் பக்தனின் பக்தி பாஷத்தினால் கட்டப்பட்ட பாத பத்மங்களைக் கொண்டவன். பக்திபாஷத்தினால் தன்னை கட்டிய பக்தனை பகவந்தன் என்றும் விடுவதில்லை. அப்க்தனை பவபாஷத்திலிருந்து விடுவிக்கிறான். 'வைகுண்டம் வாபரித்யக்ஷெ ந பக்தாந்த்யக்துமுத்ஸம்ஹே'. 'மீதிப்ரயாஹி மத்பக்தா:' இது பகவந்தனே கூறிய வாக்கியங்கள். வைகுண்டத்தையாவது விட்டுவிடுகிறேன். என் பக்தனை நான் விடுவதில்லை. எனக்கு மிகவும் பிடித்தமானவன் என் பக்தனே. 'பக்த்யாத்வனன்யயா லப்ய: அஹமேவம் விதோர்ஜுனா:' – 'இடைவிடாத பக்திக்கு மட்டுமே நான் தரிசனம் அளிக்கிறேன்' என்று கூறி, பக்திக்கு இருக்கும் மகிமையை விளக்கியிருக்கிறான் கீதாசார்யன். இத்தகைய பக்தி, ஒன்பது விதங்களாக உள்ளது.

ஸ்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதஸேவனம்
அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் சக்யம் ஆத்ம நிவேதனம்

இதையே ஹரிதாசர்,

ஸ்ரவண கீர்த்தன விஷ்ணுஸ்மரண பாதயுக
ஸேவார்ச்சன தாஸ்ய வந்தனெ கோலெ
ஸேவார்ச்சன தாஸ்ய வந்தனெ ஸக்யவாத்ம
நிவேதனவெம்ப நவபகுதி கோலெ

இத்தகைய நவவித பக்தியை செய்யும் பக்தர்களை ஸ்ரீஹரி தன் பவனத்தில் வைத்து அருள்கிறானாம்.

நவவித பகுதிய நெவதிந்த ஹரி தன்ன
பவனதொளகிட்டு பாலிப கோலெ
பக்தவத்ஸலனெம்ப பிருது பொத்துகொண்டு
பக்தாதீனனெனிப பகவந்த கோலெ
பக்தாதீனனெனிப பகவந்த பாக்யநிதி
பக்தரனெந்தெந்து பிடனய்ய கோலெ

பக்தி, பகவந்தன் மற்றும் பக்தரின் நடுவில் நிரந்தரமான, திடமான சம்பந்தம் உண்டு என்கிறது. இந்த சம்பந்தத்தின் சுவையை அனுபவித்த தன்ய ஜீவிகள் பிரசன்ன வெங்கட தாசர் அவர்கள். தம் அனுபவாம்ருதத்தை அனைத்து சஜ்ஜனர்களுக்கும் பகிர்ந்தளிக்கும் நல்ல நோக்கத்துடனே,

தாசர், நவவித பக்திகளின் வைபவத்தையும், அவற்றின் அவசியத்தையும் வர்ணிக்கும் தனித்தனி கீர்த்தனைகளை இயற்றியிருக்கிறார்.

ஹரிகதா ஸ்ரவணஸாதனவெ முகுதி இதகெ
சரி தர்மவில்லெந்து பேள்வவு ஸ்ருதிததி ||

ஹரிகதாஸ்ரவணமே முக்திக்கு முக்கிய சாதனம் என்று சொல்லும் தாசர், இந்த கீர்த்தனையில் ஸ்ரவண பக்தியின் மகிமையையும், அதன் மூலம் கிடைக்கும் பலன்களையும், இதனை செய்து அருள் பெற்றவர்களையும் விவரிக்கிறார். மனனத்திற்கு மூலம் – சிரவணம். சிரவண பக்தியை செய்த மனிதன், ஏகாந்தத்தில் அமர்ந்து தான் கேட்ட விஷயங்களை மனனம் செய்வதில் தேர்ந்தவன் ஆகிறான். ஸ்ரவண பக்தியினாலேயே அனைத்து சத் தர்மங்களின் சாதனை சாத்தியம் ஆகிறது. சிரவணத்தினால் பரமாத்மனின் மகிமையை அறிந்து, வைராக்கியம் கிடைக்கிறது. இதிலிருந்து பக்தி, அதிலிருந்து முக்தி. சிரவண பக்தியினால், கெட்ட யோனியில் பிறந்த நாரதர் அபரோக்ஷம் பெற்றார். சிரவண பக்தியினால் பரீக்ஷித் ஏழு நாட்களில் பவபந்தனங்களிலிருந்து முக்தன் ஆனான். தேவதைகள், ரிஷிகள், கந்தர்வர்கள், ராஜர்கள், மானுஷோத்தமர்கள், இந்த அனைத்து சாத்விக ஜீவர்களும் சிரவண பக்தியினாலேயே தன்யராகி நற்கதி அடைந்தனர்.

கலியுகத்தில் யக்ஞ, யாக, தவம், அர்ச்சனாதிகளால் பகவத் அருளைப் பெறுவது அசாத்தியம். சூழ்நிலை, அதர்மத்தின் நிலை, இந்திரியங்களின் செயல்கள், அசுத்த ஆகாரம், கெட்டவர்களின் நட்பு ஆகியவையே இதற்கு காரணம். இத்தகைய இந்த கலியுகத்தில், அவனது அருளைப் பெறுவதற்கு, கீர்த்தன பக்தி ஒன்றே வழியாகும். இதனை அறிந்த தாசர்,

புண்யமார்க்கவனரியத மூடரிகெ
உன்னத குடில பாமர மனுஜரிகெ
கன்ன ஸாதனவிதே மத்தொந்து காணெ
புண்யஸ்லோகன வார்த்தெகீர்த்தனெய படனெ

தர்ம ஸுமார்க்கவர்ஜித கலியுகதி
நிர்மல மன ஹொந்தலீஸத பவதி
தர்மப்ரபு ஸ்ரீஹரிகுண கீர்த்தனெ
உம்மயதலி மாடுவுதே ஹரிப்ரார்த்தனெ
ஸ்ரீவிஷ்ணு மஹிமெ சங்கீர்த்தனெ, சர்வதா
விஸ்ம்ருதிய நீகி மாடி வைஷ்ணவரு

என்று கூறி கலியுகத்தில் கீர்த்தன பக்தியின் அவசியத்தை தெளிவுபடுத்துகிறார். ராம நாமத்தை எப்போதும் உச்சரிக்கும் ஹனுமந்தன், நிரந்தர பாகவத காயனத்திலேயே இருக்கும் சுகாசார்யர், மஹதியை நுடித்தவாறு நாராயண நாம சங்கீர்த்தனையை செய்து, பாபிகளை பவித்ரமாக்கும் நாரதர், இவர்கள் அனைவரும் கீர்த்தன பக்திக்கு மயங்கி, எப்போதும் பகவன் நாம சங்கீர்த்தனையினால் புளகாங்கிதர்கள் ஆகி, முக்தி பெற்ற மஹிதாத்மர்கள் ஆவர். கலியுகத்தில் கேசவனுக்கு ப்ரியமானது கீர்த்தனை பக்தி ஆகும்.

மக்களாடிஸுவாக மடதியொ
ளக்கரதி நலிவாக ஹய ப
ல்லக்கி கஜமொதலாத வாஹனகளேரி மெரெவாக
பிக்குவாக ஆகளிஸுதலி தே
வக்கிதனயன ஸ்மரிஸுதிஹ நர
ஸிக்கனெமதூதரிகெ ஆவாவல்லி நோடிதரு ||

இது ஜகன்னாததாசர் தம் ஹரிகதாம்ருதசாரத்தின் நாமஸ்மரண சந்தியின் துவக்கத்தில் கூறிய பத்யம். ஜகன்னாததாசருக்கு நாமஸ்மரண சந்தியில் கீர்த்தனை விஷயத்தில் பிரசன்ன வெங்கட தாசரின் பக்தியின் பாடலே ஒரு ஊக்கமாக இருந்திருக்கவும் வாய்ப்பு இருக்கிறது.

விஷ்ணு ஸ்மரணையே உண்மையான சஜ்ஜன சங்கம். விஷ்ணு ஸ்மரணையே மோட்சம். விஷ்ணு ஸ்மரணையே சத்பக்தி. எப்போதும் ஸ்மரண பக்தியில் இருக்கும் ஹரனுக்கு ஹாலாஹல விஷம் குளிர்ச்சியானது. ஸ்மரணையே திரௌபதியின் மானத்தை காப்பாற்றியது. அஜாமிளனின் பாவங்கள் அனைத்தையும் ஒரு நொடியில் தீர்த்தது. இந்த ஸ்மரண பக்திக்கு சமமான சாதனை வேறொன்றில்லை. பூமி பிரதட்சிணையைவிட, அனைத்து தீர்த்த யாத்திரைகளைவிடவும் சிறந்தது இந்த ஸ்மரண பக்தி. கீர்த்தன, ஸ்மரண, ஆத்ம நிவேதன பக்திகளுக்கு கால தேசங்களில், நிலைகளின் தேவை இல்லை.

எழும்போது, அமர்ந்தபோது, செயல்களை செய்யும்போது, பேசும்போது, ஸ்னானம் செய்யும்போது, உண்ணும்போது, என அனைத்து நிலைகளிலும் செய்யத்தக்கது கீர்த்தன, ஸ்ரவண, ஆத்ம நிவேதன என்னும் இந்த மூன்று பக்திகள். இதையே, கர்னாடக சங்கீத பிதாமகரும், பிரசன்ன வெங்கட தாசருக்கு மிகவும் பிரியமானவருமான புரந்தரதாசர் :

கலியுகதலி ஹரிநாமவ நெனெதரெ
குலகோடிகளு உத்தரிசுவவோ ||ப

ஸுலபத முகுதிகெ ஸுலபனெந்தெனிஸுவ
ஜலருஹனாபன நெனெ மனவெ ||அப

ஸ்னானவனரியெனு மௌன்வனரியெனு
த்யானவனரியேனெந்தென பேடா
ஜானகிவல்லப தஷரத நந்தன
கானவினோதன நெனெ மனவே ||

அர்ச்சிஸலரியெனு மெச்சிஸலரியேனு
துச்சனு நானெந்தென பேட
அச்யுதானந்த கோவிந்த முகுந்தன
இச்செயிந்த நீ நெனெ மனவே ||

ஜபவொந்தரியேனு தபவொந்தரியே
உபதேஷவில்லெந்தென பேட
அபார மஹிம ஸ்ரீபுரந்தரவிட்டலன
உபாயதிந்தலி நெனெ மனவே ||

என்று கூறியிருக்கிறார். புரந்தரதாசரிடமிருந்து ஊக்கம் பெற்று, ஜகன்னாததாசரைப் போன்ற அனேக ஞானிவரேண்யர்களுக்கு முன்னுதாரணமாக இருந்த பிரசன்ன வெங்கட தாசர். ஸ்மரண பக்தியின் மகிமையை ஐந்து சரணங்களால் கூடிய கீர்த்தனையில் வர்ணித்திருக்கிறார்.

ஸ்ரீவிஷ்ணு ஸ்மரணெயிம் ஸாதுஸம்ஸர்க்க
ஸ்ரீவிஷ்ணு ஸ்மரணெ எம்புதே அபவர்க்க
ஸ்ரீவிஷ்ணு ஸ்மரணெயலி ஸத்புத்திதீர்க்க
ஸ்ரீவிஷ்ணு ஸ்மரணெகெச்சர புதவர்க்க

கீர்த்தனையின் இந்த பல்லவியே ஒரு கிரந்தம். வேதாந்தத்தின் அர்த்தங்களை வெளிப்படுத்தும் வழி. ஸ்மரண பக்திக்கு தேஷ, கால, ஜாதி, மத, நிலைகளின் நியமம் இல்லை என்பதை

குறிப்பிடுவதற்காகவே தாசர், பல்லவியின் பாதங்களின் துவக்கத்தில் விஷ்ணு ஷப்தத்தை பயன்படுத்தியிருக்கிறார். விஷ்ணு என்றால், அனைத்து இடங்களிலும் வியாப்தன் என்று அர்த்தம். விஷ்ணு, தேஷ கால ஜாதி மத நிலைகளில் பூர்ணமாக வியாபித்திருக்கிறான். பரம பவித்ரனான விஷ்ணுவின் வியாப்தியினால் கூடிய இந்த தேஷகாலாதிகள் அனைத்தும் எப்போதும் பவித்ரமானவை.

பகவத் சிந்தனை இல்லாத மனிதனுக்கு மட்டும் சில தேஷ காலங்கள் அபவித்ரமாகி, சில தேஷ காலங்கள் பவித்ரமாக தெரிகிறது. பகவந்தனை எல்லா இடங்களிலும் காணும் பக்தனுக்கு அனைத்துமே பவித்ரம். உண்மையான பக்தன், அனைத்து இடங்களிலும், அனைத்து காலங்களிலும், அனைத்து நிலைகளிலும் வியாபித்திருக்கும் விஷ்ணுவை எப்போதும் நினைக்கிறான். ஆனந்தத்தை அனுபவிக்கிறான். சாதுகளுக்கு சாதுத்வத்தையும் அருளும் உண்மையான சாது எனப்படும் விஷ்ணுவை எப்போதும் நினைக்கும் மனிதன், எப்போதும் சாது சங்கத்திலேயே இருக்கிறான்.

ஸ்மரணபக்தியினால் கூடிய மனிதனில், புத்தி மனம் ஆகியவற்றில் பகவந்தன் எப்போதும் இருப்பதால், அவனின் தேகத்தில் வசிக்கும் தத்வாபிமானி தேவதைகள் அனைவரும், எப்போதும் அவனுக்கு அருள்வதாகவே இருக்கிறார்கள். அவனை காக்கிறார்கள்.

ஸ்வபிரயோஜன ஹீனோபி மாயயா பஹுரூபவான

பகவந்தனுக்கு எதனாலும் எவ்வித பலனும் இல்லை. அவன் பூர்ணகாமன். ஞானானந்த ஸ்வரூபி. ஆனாலும் ஜீவனின் மேம்பாட்டிற்காக தன் விருப்பத்தினால் அனந்த ரூபங்களை தரிக்கிறான். இத்தகைய பிரபுவிற்கு தேஷகாலங்களால் சமளான மகாலட்சுமி ஸ்வாமியின் அந்த சேவைக்காக தானும் அனந்தரூபங்களை தரிக்கிறாள்.

ஆவாவ தேஷதி ஆவாவ காலதி
ஆவாவ ரூப தரிஸித ஹரிமனோ
பாவவ உதிஸோளு கோலெ

லட்சுமியின் அனந்தரூபங்களில் ஒரு ரூபம், அனாத்யனந்த காலங்களால் ஸ்ரீஹரி பாதசேவையை செய்தவாறு, ஆனந்தத்தை அனுபவித்திருக்கிறாள். அந்த ரூபம், ஸ்ரீஹரியின் பாதசேவா பக்தியின் முக்கியத்துவத்தையும், அதன் சுவையையும், அதன் சிறப்பையும், விளக்குகிறது. கங்காதேவிகூட த்ரிவிக்ரம ரூப பகவந்தனின் பாதங்களைக் கழுவி, பாதசேவா பக்தியின் இனிமையை அனுபவிக்கிறாள். இத்தகைய பாதசேவாரூப பக்தியை பிரசன்னவெங்கட தாசர்,

ஸ்ரீரமணன பாதஸேவன மாடி புவன
ஈர மததவரனுதின
மஹாலகுமி பாதஸரோ ருஹத்பயன தோளலப்பி
ஸ்னேஹவார்த்தியலி முளுகி கஹனதி பஜிஸுதலிப்ப ||

என்னும் இந்த கீர்த்தனையில் மனமுருகி வர்ணிக்கிறார்.

அர்ச்சனெ மாடிரய்ய ஸ்ரீபகவ
தர்ச்சனெ மாடிரய்ய
அர்ச்சனெ மாடுவ அர்ச்சக புதரிகெ
அர்ச்சப பததலி அச்யுத தொரெவனெந்து

என்னும் இந்த கீர்த்தனையினால் அர்ச்சன பக்தியையும்,

வந்திஸிதரெ வந்த்யரு பூஜிதரு மு
குந்த கோவிந்த ஸ்ரீஹரியன்னு
எந்தெந்து குந்ததானந்தவைதிஸுவ
இந்திரெயரஸ பவபந்த மோசகன

என்னும் கீர்த்தனையினால் வந்தன பக்தியையும்,

ஸக்யவிரபேகு ஹரிபக்தஜனகெ
முக்திதாயக பார்த்தஸகன பாதாப்ஜதலி

என்னும் கீர்த்தனையினால் சுகபக்தியையும்,
ஆத்மனிவேதன பகுதி தன்னாத்மனீவ பரமாத்ம விஷ்வாத்மகெ

என்னும் கீர்த்தனையினால் ஆத்ம நிவேதன பக்தியையும் விளக்கத்துடன் வர்ணிக்கிறார். பிரசன்ன வெங்கட தாசரைவிட முந்தையவர்களான ஸ்ரீபாதராஜரின், வியாசராயரின், வாதிராஜரின், புரந்தரதாசரின், கனகதாசரின் சாகித்யங்களிலோ, அவரது பிற்காலத்தைய விஜய, கோபால, ஜகன்னாத தாசரைப் போன்ற புகழ்பெற்ற தாசர்களின் சாகித்யங்களிலோ, தனித்தனியான கீர்த்தனைகளில் நவவித பக்திகளின் வர்ணனையை காண முடிவதில்லை.

நவவித பக்திகளின் வர்ணனை, பிரசன்ன வெங்கட தாசருக்கு மட்டுமே சரியாகப் பொருந்தியிருக்கிறது. இதுமட்டுமல்லாமல், தாசர் இந்த நவ வித பக்திகளின் ஸ்வரூபம், அனுஷ்டான பத்ததி, பலன்களை ஒன்பது உகாபோகங்களில் வெவ்வேறாக வர்ணித்திருக்கிறார்.

## வேதாந்த நுண்ணறிவு
## (நுட்பப் பார்வை)

பிரசன்ன வெங்கட தாசரின் கீர்த்தனைகளில் பிரார்த்தனை, ஸ்தோத்திரம், உலக நீதி, உபாசனை, ஸாதனை, இவற்றிற்கு சம்பந்தப்பட்ட விஷயங்களை பார்க்கலாம். ஆனால், அவரின் அனைத்து கிருதிகளில் பொதுவாக காணப்படும் விஷயம் என்னவென்றால், அவர் நம்பும் ஆசார்ய மத்வரின் சித்தாந்த பிரமேயங்கள்.

தாசரின் த்வைத தீக்ஷை அபூர்வமானதாகும். ஒவ்வொரு கிருதியிலும் த்வைத பிரமேயங்களை தெளிவாக சொல்வதுடன், அதன் அர்த்தங்களிலும் அந்த பிரமேயங்களை மேற்கோள் காட்டி விளக்குகிறார். இது ஹரிதாச சாகித்யத்தின் சிறப்பு ஆகும். தாசர் வாசுதேவரூபி பகவந்தனின் ஸ்தோத்ரத்தைப் போன்றதான ஒரு சிறிய கீர்த்தனையை இயற்றியிருக்கிறார்.

வாஸுதேவ வாஸுதேவ
வாஸவ ஹர விதிபதி வாஸுதேவ

அகிள ஜகதந்தர்பஹி வாஸுதேவ
பகுத ஹ்ருதயமந்திர வாஸுதேவ ||1

வைகுண்ட க்ஷீரஸாகர வாஸுதேவ
ஸ்ரீகரானந்தாஸன வாஸுதேவ ||2

ஸ்வாமி புஷ்கரகூலஸ்திர வாஸுதேவ
ஸ்வாமி பிரசன்ன வெங்கட வாசுதேவ ||3

கீர்த்தனை மிகவும் சிறியது. மொத்த சொற்கள் 18 மட்டுமே. இதில் வாஸுதேவ சொல்லே ஒன்பது முறை வந்திருக்கிறது. மற்ற சொற்கள் ஒன்பது. அவை. 1. வாஸவஹர விதிபதி 2. அகிள ஜகதந்தர்பஹி 3. பகுத ஹ்ருதய மந்திர 4. வைகுண்ட 5. க்ஷீரஸாகர 6. ஸ்ரீகரானந்தாஸன 7. ஸ்வாமி புஷ்கரகூல 8. ஸ்வாமி 9. ப்ரஸன்ன வெங்கட.

எண் கணித சாஸ்திரம், இந்தியர்களின் ஒரு அபூர்வ பரிசு. எண்ணிக்கையின் மூலம் வேதாந்த பிரமேயங்களையும், அனேக ரகசிய அர்த்தங்களையும் அறிவது, நம் பண்டைய கிரந்தகாரர்களின் வழக்கம். எண்ணிக்கையில் பற்பல அர்த்தங்களை சொல்வது என்றால் இதுவே. உதாரணத்திற்கு பார்க்கவேண்டுமெனில், மகாபாரதம் நடந்தது 18 நாட்களில். போரில் பங்கேற்ற சேனைகளின் எண்ணிக்கை 18 அக்ஷோஹிணி. பகவத் கீதையில் இருக்கும் அத்தியாயங்கள் 18. இந்த 18ன் மகிமை சிறப்பானது. 18 என்னும் எண்ணிக்கையில் 1 மற்றும் 8 என்னும் இரு எண்கள் உள்ளன. இவற்றை சேர்த்தால் 1+8=9 என வருகிறது. இந்த 9 என்பது இந்தியர்களுக்கு பவித்ரமான எண்ணிக்கை. இந்த 9ல் இவர்களின் ஆன்மிகமே அடங்கியிருக்கிறது. க்ருத, த்ரேதா, த்வாபர, கலியுகங்களின் ஆயுட்காலத்தின் எண்ணிக்கையை கூட்டினால் வரும் எண் ஒன்பது.

கலியுத்தின் ஆயுட்காலம் 17,28,000 ஆண்டுகள். இந்த எண்களை கூட்டினால் 1+7+2+8+000=18=1+8=9 என வருகிறது. இதைப்போலவே மற்ற அனைத்து யுகங்களையும் கூட்டினாலும் வருகிறது.

த்ரேதா யுகம் = 12,96,000 = 1+2+9+6+000=18=1+8=9
த்வாபர யுகம் = 8,64,000 = 8+6+4+000=1+8=9
கலி யுகம் = 4,32,000 = 4+3+2+000=9

இந்த நான்கு யுகங்களும் ஒரு முறை வந்து முடிந்தால், அதற்கு ஒரு மகாயுகம் என்று பெயர். மகாயுகத்தின் ஆயுட்காலம் 43,20,000. இதன் எண்களைக் கூட்டினால் 4+3+2+000=9 வருகிறது. 71 மகாயுகங்களின் காலமே ஒரு மனுவின் வாழ்க்கை ஆகிறது. ஒரு மகாயுகத்தின் ஆயுட்காலம் 43,20,000. 71 மகாயுகங்களின் ஆயுட்காலம் 43,20,000 x 71 = 30,67,20,000. இந்த எண்ணிக்கையை கூட்டினாலும் 9 வருகிறது.

மேலும் ஒவ்வொரு மனிதனும் ஒரு நாளுக்கு 21,600 முறை மூச்சு விடும் செயலை செய்கிறான். இதனைக் கூட்டினாலும் 9 வருகிறது. மனிதனின் தேகத்தில் இருக்கும் மொத்த நாடிகளின் எண்ணிக்கை 72,000. இவற்றின் கூட்டுத் தொகையும் ஒன்பது. இதைப்போலவே ஒரு ஆண்டின் நாட்கள் 360 (கூட்டுத்தொகை 9). நட்சத்திரங்கள் 27 (கூட்டுத்தொகை 9).

எண் கணிதத்தின் அழகிற்கு மனம் மயங்கிய பிரசன்ன வெங்கட தாசர், மேற்கண்ட கீர்த்தனையில் 18 என்னும் எண்ணினை அற்புதமாக பயன்படுத்தியுள்ளார். இதில் உள்ள மொத்த சொற்கள் 18. தாசரால் அதிக முறை பயன்படுத்தப்பட்ட வாசுதேவ என்னும் சொல்லும் 18 என்னும் எண்ணையே குறிக்கிறது. வாசுதேவ சொல்லில் மொத்தம் 4 எழுத்துக்கள். இந்த எழுத்துக்களின் எண்ணிக்கையப் பார்த்தால், வா = 4 (ய,ர,ல,வ என்று 4வதாக வருவதால்). ஸு=7 (ய,ர,ல,வ,ஷ1,ஷ2,ஸ என்று 7வதாக வருவதால்). தே=3 (த1,த2,த3 என்று மூன்றாவதாக வருவதால்). வ = 4 (ஏற்கனவே பார்த்ததைப் போலவே). ஆக, 4,7,3,4 ஆகிய எண்களைக் கூட்டினால் 18 என்று வருகிறது.

இந்த 18 என்னும் எண்ணினை மூன்று விதமாக பார்க்கலாம். இந்த 18ல் 1 & 8 இரு எண்கள் உள்ளன. இந்த இரண்டினையும் கூட்டினால் வருவது 9. இவ்வாறு, 18,1,8,9 ஆகிய எண்கள் ஒரு சிறந்த வேதாந்த ரகசியத்தை குறிக்கிறது. வேதங்களில் மாத்ரு ஸ்தானத்தில் இருப்பது புருஷ சூக்தம். இந்த சூக்தம் 18 ரிக்குகளைக் கொண்டது. இது அனைத்து வேதங்களின் பிரதிநிதி ஆகும். மூன்று மதாசார்யர்களால் வியாக்யானம் எழுதப்பட்ட புகழ்பெற்ற உபநிஷத்கள் மொத்தம் 10.

இந்த 10 உபநிஷத்களில் ஒன்றான ஈஷாவாஸ்ய உபநிஷத் 18 மந்திரங்களைக் கொண்டது. இந்த ஈஷாவாஸ்ய உபநிஷத்தினைக் குறிக்கிறது. 18 புராணங்களில் அனைவராலும் புகழப்பட்டு, பாராயண, பிரவசனங்களின் மூலம் புகழ்பெற்ற புராண ராஜ பாகவத. இது 18,000 ஸ்லோகங்களைக் கொண்டதாகும். பாகவத அனைத்து புராணங்களுக்கு பிரதிநிதி. 18ன் மூலம் குறிப்பிடப்படும் அனைத்து வேதங்களைவிட, அனைத்து உபநிஷத்களைவிட, அனைத்து புராணங்களைவிட, பிரதானமாக, சர்வோத்தமனாக அறியப்படுபவன் - பிரம்மன் ஒருவனே. அவனே வாசுதேவன்.

அவன் ஸ்ருஷ்டி, ஸ்திதி, லய, நியமன, ஞான, அஞ்ஞான, பந்த, மோட்ச என்னும் அஷ்ட கர்த்ருத்வத்தை செய்பவன். 8 வேத உபநிஷத் புராணங்களால் சர்வோத்தமனாக அறியப்படும், அஷ்டகர்த்ருத்வ என்னும் மகிமைகளைக் கொண்ட வாசுதேவன், நவவித பக்திக்கு மட்டுமே தெரியப்படுபவன். 'அமலா பக்திஸ்ச தத்ஸாதனம்' சுத்தமான பக்தி மட்டுமே பகவத் பிரசாதத்திற்கு முக்கியமான காரணம். அபூர்வமும், மிகவும் அவசியமுமான இந்த பிரமேயம், 18 என்னும் எண்ணினால் குறிப்பிடப்படுகிறது. ஒவ்வொரு பதார்த்தங்களிலும், ஒவ்வொரு மனிதரிலும், ஒவ்வொரு சொல்லிலும், ஒவ்வொரு எழுத்திலும், ஒவ்வொரு எண்ணிக்கையிலும் பகவந்தனைக் கண்ட தன்ய ஜீவிகள் - ஹரிதாசர்கள். ('கண்ட கண்டல்லி விஷ்வரூபவ காம்பரோ').

இதைப்போல இந்த 18 என்னும் எண், இன்னொரு முக்கிய ஆதாரமாகவும் உள்ளது. ஒவ்வொரு ஜீவியும் அனாதியிலிருந்து 15 பந்தனங்களால் கட்டுப்படுத்தப்படுகிறான். அவை: சிரத்தை, ஆகாஷ, வாயு, அக்னி, ஜல, ப்ருத்வி, இந்திரிய, மனஸ், அன்ன, வீர்ய, தபஸ், மந்த்ர, கர்ம, லோக மற்றும் நாம.

பிராணாத் ஸ்ரத்தாம் கம் வாயுர்ஜோதிராப:
ப்ருதிவீந்த்ரியம் மனோऽன்னமன்னாத் வீர்யம்
தபோ மந்த்ரா: கர்மலோகா லோகேஷு நாம ச

இந்த 15 பந்தனங்களால் கட்டுப்பட்ட ஜீவி 16ம் ஆனவன். இந்த 15 பந்தனங்களால் ஜீவியை கட்டியவள், மூலப்ரக்ருதிக்கு அபிமானியான ஸ்ரீ,பூ,துர்காத்மகளான ரமாதேவி. இவள் 17ம் ஆனவள். ரமாவால் கட்டுப்பட்ட ஜீவி, இந்த 15 பந்தனங்களை அறுத்து, ஜீவியை பந்தமுக்தனாக செய்பவன் பரபிரம்ம நாராயணன். இவன் 18ஆமவன். இவனே கடைசியானவன். மேலே 19 என்பது இல்லை. இவனே வாசுதேவ. தாசர் இந்த பிரமேயங்களின் குறிப்பாகவே 18 எண்ணிக்கையை கீர்த்தனைகளில் பயன்படுத்துகிறார்.

தாசர் கீர்த்தனையில் வாசுதேவ என்னும் சொல்லை பயன்படுத்தி, அதன் அபூர்வத்தையும், அவசியத்தையும் தெரிவித்திருக்கிறார். பகவந்தனின் இந்த வாசுதேவ நாம அவனின் பிற அனந்தானந்த நாமங்களைக் குறிப்பதாகவும் ஆகிறது. இதற்கு காரணம் பகவந்தனின் நாமரூபங்களுக்கு பேதம் இல்லை.

கீர்த்தனையில் பல முறை சொல்லப்பட்டுள்ள வாசுதேவ நாமம், பல அர்த்தங்களைக் கொடுக்கிறது. சொல் ஒன்றே ஆனாலும், அர்த்தங்கள் மட்டும் வெவ்வேறாக இருக்கிறது. தாசர் வாசுதேவ சொல்லை திரும்பத்திரும்ப சொல்லி, பரபிரம்மன் அனந்த கல்யாண குணபரிபூர்ணன் என்றும், அனந்த சக்தி சாமர்த்தியம் உள்ளவன் என்றும், சர்வோத்தமன், சர்வாதாரன், சர்வாஸ்ரயன், ஸர்வவியாபகன், ஸ்வதந்த்ரன், ஸர்வோத்பாதகன், ஸர்வஸ்வாமி ஆகியிருக்கிறான் என்று தெளிவுபடுத்துகிறார். இதுவே உண்மையான உபாசனை.

வாசுதேவ ரூபங்கள் பல உள்ளன. ஆத்ம ஸ்ருஷ்டியின் துவக்கத்தில் மூலரூப நாராயணனிடமிருந்து வெளிப்பட்ட வாசுதேவரூபம் முதலாவது. ஷ்வேதத்வீபத்தில் எப்போதும் படுத்திருக்கும் வாசுதேவரூபம் இரண்டாவது. கேசவாதி 24 ரூபங்களில் வரும் வாசுதேவ ரூபம்

மூன்றாவது. விஷ்வாதி சஹஸ்ர நாமத்தின் நடுவில் வரும் வாசுதேவ ரூபம் நான்காவது. த்வாபரத்தில் வசுதேவனுக்கு மகனாக தோன்றி வந்த வாசுதேவ ரூபம் ஐந்தாவது. இவ்வாறு பல வாசுதேவ ரூபங்கள் உள்ளன. இந்த அனைத்து ரூபங்களும் நாம ரூப குண ஷக்தி சாமர்த்தியங்களால் பூர்ணமானவை. தேஷகாலங்களில் நித்யமானவை. சமானமானவை. அபின்னமானவை.

வாசுதேவ நாமம், அனேக அர்த்தங்களைக் கொண்டிருக்கிறது. பகவந்தனின் அனேக குண தர்ம ஷக்தி சாமர்த்தியங்களை குறிப்பதாக, உபாசனைக்கு பயன்படுகிறது.

அனைத்தையும் வல்லவன், அனைத்தையும் படைத்தவன், செயல்களை செய்பவன் என்னும் இந்த மூன்று அர்த்தங்கள் வாசுதேவ சொல்லினால் வா-ஸு-தேவ என்னும் எழுத்துக்களால் முறையே அறியவேண்டும். வா என்றால் அறிகிறான் (வாதி ஜானாதி இதி வா:). ஸு என்றால் படைக்கிறான் (ஸுதே உத்பாதயிதீதி ஸு:). தேவ சொல்லுக்கு செயல்களை செய்பவன் என்று அர்த்தம். (தீப்யதி க்ரீடதே இதிதேவ:). மொத்தத்தில் வாசுதேவ சொல்லினால் அனைத்தையும் அறிந்தவன், அனைத்தையும் படைத்தவன், செயல்களை செய்பவன் என்னும் அர்த்தங்கள் வருகின்றன. (வாஷ்வாஸௌ + தேவஸ்சாஸாஸுஸ் சாஸௌ + வாசுதேவ:) இவ்வாறு முதலாம் வாசுதேவ சொல் பயன்பாட்டினால், தாசர், பகவந்தன் சர்வக்ஞன், ஸ்ருஷ்டிகர்த்தன், க்ரீடாதி குணவிசிஷ்டன் என்று குறிப்பிடுகிறார்.

இரண்டாம் வாசுதேவ என்னும் சொல்லினால், பகவந்தன், அணுஅணுவானவன், அந்தர்யாமியாக வசிப்பவன், அனைத்தையும் தனக்குள் வைத்துக்கொண்டிருப்பவன் மற்றும் ஒளிர்பவன் என்னும் இந்த மூன்று அர்த்தங்களை தெரிவிக்கிறார். இந்த அர்த்தங்களை சொல்லும்போது வாசுதேவ சொல் 'ஸர்வத்ரவஸதீதி, ஸர்வமத்ர, வஸதீதி வா வாஸு: தீவ்யதி த்யோதத இதி தேவ: வாஸுஸ்சாஸௌ தேவஸ்ச வாசுதேவ:' என்று தெரிவிக்கிறது. வாஸ என்னும் மூலச்சொல்லிற்கு 'நிவாஸ' என்று அர்த்தம். இந்த அர்த்தங்களைக் கொண்ட வாசுதேவ சொல்லினை பயன்படுத்திய தாசர், வாசுதேவ சர்வாந்தர்யாமி, சர்வாதாரக, பிரகாஷமூர்த்தி என்று குறிப்பிடுகிறார்.

பகவந்தன் பல ஸ்வரூபி, (மஹாபலவந்த) பிராணரூபி, ஜீவர்களுக்குத் தேவையான அனைத்தையும் கொடுப்பவன். இதற்காக அனைத்து இடங்களிலும் இருப்பவன். என்னும் இந்த நான்கு அர்த்தங்களையும் வாசுதேவ சொல்லில் இருக்கும் வ-அஸு-தே-வ என்னும் இந்த எழுத்துக்கள் சொல்கின்றன. 'பலாத் வ: ப்ராணரூபத்வத் அஸு: தாத்ருத்வாத் தே: ஸர்வத்ரவர்த்தத இதி வ: ஸ்சாஸௌ அஸுஸ்சாஸௌ தேசாஸா வஸ்செதி வாஸுதேவ:'. இது வாசுதேவ சொல்லின் இன்னொரு அர்த்தம். இதனால், பகவந்தன், மகாபலசாலி, பிராணஸ்வரூப, கொடுப்பவன், சர்வத்ர வியாப்தன் என்று குறிப்பிடுகிறார்.

சம்சார நிலையில் இருக்கும் ஜீவருக்கு பகவந்தன் தன் ரூபத்தைக் காட்டாமல் இருப்பதாலும், மோட்சத்தில் இருக்கும் ஜீவருக்கு தன் ஸ்வரூபத்தை எப்போதும் காட்டிக் கொண்டே இருப்பவன் ஆனதால், பகவந்தன் வாசுதேவ என்று அழைக்கப்படுகிறான். இந்த அர்த்தத்தில் வாசுதேவ சொல்லின் விளக்கம் 'வாஸுயதி ஆத்மஸ்வரூபம் ஸம்ஸாரே இதி வாஸு: தேவயதி த்யோதயதி மோக்ஷே ஆத்மஸ்வரூபமிதி தேவ: வாஸுஸ்சாஸௌதேவஸ்ச வாஸுதேவ:' என்று ஆகிறது. இதனால் பகவந்தன் வியக்த-அவ்யக்தன் என்பதை நான்காம் வாசுதேவ சொல்லின் மூலம் தாசர் குறிப்பிடுகிறார்.

யோக்ய ஜீவரில் ஞானத்தை நிறுவியவாறு, அஞ்ஞானிகளுக்கு அஞ்ஞானத்தைக் கொடுப்பவனாக செயல்களை செய்வதாலும், பகவந்தன் வாசுதேவ என்று அழைக்கப்படுகிறான். 'யோக்யேஷு வம் ஞானம் அஸ்யதி ஸ்தாபயதி, ததா அயோக்யேஷு வம் ஞானம் அஸ்யதி நிரஸ்யதி இதி வாஸு: தீவ்யதி க்ரீடதி இதி தேவ:. ததாச வாஸுஸ்சாஸௌ தேவஸ்ச வாசுதேவ'. இந்த அர்த்தத்தில் வாசுதேவ சொல் விளக்கப்படுகிறது. இத்தகைய அர்த்தம் கொண்ட ஐந்தாம் வாசுதேவ

சொல்லினை பயன்படுத்தி, தாசார்யர், பகவந்தன், ஞான அஞ்ஞான ப்ரதனாக செயல்களை செய்கிறான் என்று குறிப்பிடுகிறார்.

பகவந்தனின் திவ்ய சன்னிதானத்தினால் வரும் சுத்தமான அந்த:கரணம் 'வசுதேவ' எனப்படுகிறது. இத்தகைய சுத்த அந்த:கரணத்தால் அறியப்படுபவனான காரணத்தால் பகவந்தன், வாசுதேவன் எனப்படுகிறான். 'விஷுத்தம் அந்த:கரணம் வாசுதேவ ஷப்திதம். விஷுத்தே அந்த:கரணே அபகதாவரண: பகவான் ப்ரதீயதே யத: அத ஏவ ஸ: வாசுதேவ:. ததாச வசுதேவே ப்ரதீயதி இதி வாசுதேவ:' (இது பன்னஞ்செ அவர்களின் விளக்கம்). இந்த அர்த்தத்தில் பிரசன்ன வெங்கட தாசர், ஆறாம் வாசுதேவ சொல்லினை பயன்படுத்தியிருக்கிறார். இதனால் வாசுதேவன் சுத்த அந்த:கரணத்தில் காட்டிக் கொள்கிறான் என்று குறிப்பிடுகிறார்.

சத்வ பிரதானங்களான பிரம்மாதிகளின் சரீரங்கள் வசுதேவ எனப்படுகின்றன. 'விஷுத்தம் ஸத்வப்ரதானம் பிரம்மாதிஷரீரம் வசுதேவஷப்திதம்'. இத்தகைய பிரம்மாதிகளின் சரீரத்தில் தோன்றியவனாகையால் பகவந்தன் வாசுதேவன் எனப்படுகிறான். (வசுதேவே அபிவ்யஜ்யத இதி வாசுதேவ:). இத்தகைய அர்த்தத்தைக் கொண்ட ஏழாம் வாசுதேவ சொல்லினால், பகவந்தன் பிரம்மாதிகளின் சரீரத்தில் எப்போதும் இருக்கிறான் என்று குறிப்பிடுகிறார்.

முக்தியோக்யரான ஜீவருக்கு தன் ஸ்வரூபத்தை காட்டி, அவர்களை அபரோக்ஷிகளாக மாற்றி, அவருக்கு முக்தியைக் கொடுத்து, அங்கு அவர்கள் ஆனந்தத்தை அனுபவிக்குமாறு செய்பவனான காரணத்தால், பகவந்தன் வாசுதேவ என்று அழைக்கப்படுகிறான். 'வா' என்னும் வேர்ச்சொல்லுக்கு கதி என்று அர்த்தம். கதி என்னும் அர்த்தம் கொண்ட தாதுகள் அனைத்தும் ஞானவாசகமானவை. ஆக, வா என்றால் முக்தியோக்ய ஜீவருக்கு, ஸ, தன் ஸ்வரூபத்தைக் காட்டிக் கொடுப்பவன் என்று அர்த்தம்.

வாபயதி முக்தியோக்யான் ப்ரதி ஸ்வஸ்வரூபம் ஞாபயதி இதி 'வா:'. ஸு என்னும் எழுத்திற்கு அந்த முக்தியோக்யர்களை முக்தர்களான செய்பவன். அதாவது, ஷ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட உலகங்களுக்கு அழைத்துக் கொள்பவன் என்று அர்த்தம். (ஸூதே முக்தியோக்யான் முக்தான் கரோதீதி ஸு:). தேவ என்னும் சொல்லுக்கு முக்தரான ஜீவருக்கு முக்தியில், தன் உலகங்களில் ஆனந்தத்தைக் கொடுக்கிறான் என்று அர்த்தம். தேவயதி மோதயதி இதி தேவ: வாஸ்ச+ ஸுஸ்ச+ தேவஸ்ச வாசுதேவ: - இந்த அபூர்வ அர்த்தத்தில் எட்டாம் வாசுதேவ சொல்லினை பயன்படுத்தி பகவந்தன் முக்தியோக்யர்களை முக்தர்களாக ஆக்கி, ஆனந்தத்தைக் கொடுப்பவன் என்று வர்ணிக்கிறார்.

அடுத்து, ஒன்பதாம் வாசுதேவ என்னும் சொல் கிருஷ்ணனைக் குறிக்கிறது. 'வஸுதேவஸ்ய அபத்யம் புமான் வாஸுதேவ:' என்னும் குறிப்பின்படி, வசுதேவனுக்கு மகனாக அவதரித்து வந்த கிருஷ்ணனே இங்கு வாசுதேவ என்னும் சொல்லினால் அழைக்கப்படுகிறான். இந்த கிருஷ்ணனே வெங்கடாசலபதி. இங்கு இன்னொரு விசேஷம் இருக்கிறது. ஷ்வேதத்வீபத்தில் வசிப்பவனான வாசுதேவனின் ஒரு கருப்பு முடி, த்வாபர யுகத்தில் கிருஷ்ணனின் ரூபத்தில் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது. வெங்கடாத்ரீசனின் ரூபம் அப்படியில்லை. ஷ்வேதத்வீபத்தில் சேஷசாயியாக படுத்திருக்கும் வாசுதேவனே, ப்ருகு ரிஷிகளின் செயலால், நேராக கீழே இறங்கி வந்து, பத்மாவதிக்கு பதியாகி, தர்மத்தின் காவலனாக, சஜ்ஜனர்களைக் காப்பதற்காக சேஷாத்ரியின் மேல் நின்றான். ஸ்ரீனிவாஸ, திம்மப்ப, கோவிந்த, வெங்கடேச, வெங்கடாசலபதி என்னும் பெயர்களால் பக்தியுடன் அழைக்கப்பட்டான். இந்த கீர்த்தனையில் தாசர், அந்த பிரபுவையே பக்தியுடன் மனமுருகி பிரசன்னவெங்கட என்று அழைக்கிறார். பிரசன்னவெங்கடனே வாசுதேவ; வாசுதேவனே பிரசன்னவெங்கட. 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' - பகவந்தனின் ரூபங்களில் எந்த வேறுபாடுகளும் இல்லை.

வாசுதேவ ஷப்தத்தின் இந்த அர்த்த விவரங்கள், கற்பனையாகவோ அல்லது பண்டிதர்களின் புத்தகங்களிலோ சொல்லப்படவில்லை. இவை அனைத்தும் தாசரின் இதயத்திலிருந்து வந்தவை.

ஸ்ரீனிவாசனின் அருளுக்கு பாத்திரராகி, அபரோக்ஷ ஞானி எனப்படும் ப்ரசன்ன வெங்கட தாசர் சிந்தித்த, கண்டு அனுபவித்த அர்த்தங்கள். வாசுதேவ ஷப்தத்தில் இருக்கும் அனைத்து அர்த்தங்களையும் சிந்தித்த தன்ய ஜீவிகள் பிரசன்ன வெங்கட தாசர். கீர்த்தனையில் இருக்கும் வாசுதேவ என்னும் சொல், அனேக அர்த்தங்களைக் கொண்டது என்பதை குறிப்பிடுவதற்காகவே தாசர் ஒன்பது முறை இதனை பயன்படுத்தியுள்ளார்.

கீர்த்தனைகளில் இருக்கும் வாசுதேவ சொற்கள் அனைத்தும் விசேஷ சொற்களாகும். 1. வாஸவ ஹரவிதிபதி 2. அகிள ஜகதந்தர்பஹி 3. பகுத ஹ்ருதய மந்திர 4. வைகுண்ட 5. க்ஷீர ஸாகர 6. ஸ்ரீகர அனந்தாஸன 7. ஸ்வாமிபுஷ்கர கொலஸ்திர 8. ஸ்வாமி 9. பிரசன்ன வெங்கட என்னும் இந்த ஒன்பது சொற்கள் 'விசேஷணங்கள்'. தாசரை நம்பி, மனம் உருகி, பக்தியுடன் இந்த விசேஷண சொற்களை படித்தால், அனைத்து விசேஷண சொற்களும் வாசுதேவ என்னும் சொல்லையே குறிப்பிடுவதாக இருக்கிறது.

வாசுதேவன் அனைத்து சேதன ப்ரபஞ்சத்திற்கு ஸ்வாமியானவன். நாதன். தலைவன். முதலாளி. பிரபு. இவனின் ஸ்வாமித்வ வெறும் ஜீவர்களின் ஸ்ருஷ்டியினால் மட்டும் கிடைத்ததல்ல. ஸ்ரீனிவாசன் அனைத்து ஜீவர்களை படைப்பதுடன், அவர்களின் நிலைக்கும், லயத்திற்கும், நியமனத்திற்கும், ஞானத்திற்கும், அஞ்ஞானத்திற்கும், பந்தத்திற்கும், மோட்சத்திற்கும் - பிரதான காரணனாக இருக்கிறான். இதனால், அவன் பிரம்மன் முதல் கிருமி ஜீவன் வரை உள்ள அனைத்து ஜீவிகளுக்கு பதியாக இருக்கிறான். இந்த பார்வையில் வாஸவ-ஹர-விதிபதி என்னும் சொல்லினை பார்த்தால், பகவந்தனின் ஸ்ருஷ்டி கர்த்ருத்வ, மோட்ச பிரதாத்ருத்வ முதலான குணங்களை அறியலாம்.

இங்கு 'வாஸவ ஹரவிதிபதி' என்னும் சொல்லை, வாஸவஹர, விதிபதி என்று பிரித்துப் பார்த்தால், பகவந்தனின் ஒரு புதிய குணம் தென்படுகிறது. இந்திர, ருத்ர, பிரம்மருக்கு பதி என்று மொத்தமான சொல்லுக்கு அர்த்தம் வந்தால், பிரித்ததில் வந்த 'வாஸவஹர' என்னும் சொல்லுக்கு, இந்திரனை வென்றவன் என்னும் அர்த்தம் வருகிறது. ஹர- சொல்லுக்கு ருத்ர என்னும் அர்த்தத்துடன் பரிஹார, நிவாரணை ஆகிய அர்த்தங்களும் இருக்கின்றன. அப்போது 'வாஸவஹர' என்னும் சொல்லுக்கு இந்திரனின் கர்வ பரிஹாரகன் என்னும் அர்த்தம் வருகிறது. பகவந்தன் த்வாபர யுகத்தில் வசுதேவனுக்கு மகனாக அவதரித்தபோது, இந்திரனின் கர்வத்தை அடக்கி பரிகரித்தான். முதல் முறை, தன் எல்லையற்ற பலத்தினால் கோவர்த்தன மலையை தூக்கி, தேவேந்திரனின் கர்வத்தை அடக்கினான். இரண்டாம் முறை, தேவலோகத்திலிருந்து பாரிஜாத மரத்தைக் கொண்டு வரும்போதும், போரில் வென்று, இந்திரனின் கர்வத்தை அடக்கினான். இதனால், பகவந்தனின் அனன்ய அற்புத வலிமையை அறியலாம். இந்திரனுக்கு போர் புரியவேண்டும் என்னும் அஞ்ஞானத்தையும், போரில் தோற்றபிறகு சரணாகதி அடையவேண்டும் என்னும் அஞ்ஞானத்தையும் கொடுத்தவன் பகவந்தனே. இதனால், வாஸவ ஹர என்னும் சொல்லினால், இரு வேறு அர்த்தங்களில், வாசுதேவ சொல்லுக்கு இருக்கும் ஞான அஞ்ஞானத்தைக் கொடுப்பவனாக செயல்களை செய்கிறான் என்னும் அர்த்தம் வெளிப்படுகிறது.

'அகிளஜகதந்தர்பஹி' என்னும் விசேஷணத்தால் வாசுதேவ சொல்லுக்கு இருக்கும் அனைத்து இடங்களிலும் வியாப்தன் என்னும் அர்த்தம் வெளிப்படுகிறது. 'பக்தஹ்ருதய மந்திர' விசேஷணத்தினால் சர்வாந்தர்யாமி, வியக்தாவியக்த, ஷுத்தாந்த:கரணத்தில் தெரிபவன் என்னும் வாசுதேவ சொல்லுக்கான அர்த்தங்கள் வெளிப்படுகின்றன. வைகுண்ட, க்ஷீரஸாகர, ஸ்ரீகரானந்தாஸன என்னும் விசேஷணங்களால் முக்தி யோக்யர்களை, முக்தர்களாக ஆக்கி, ஆனந்தத்தைக் கொடுப்பவன், அனைத்திற்கும் ஆதாரமானவன், செயல்களை செய்பவன் என்னும் அர்த்தங்கள் வெளிப்படுகின்றன.

ஸ்வாமி புஷ்கர தீர்த்தஸ்திர, பிரசன்ன வெங்கட என்னும் இந்த இரு விசேஷணங்களால், பரவாசுதேவன் ப்ருகு ரிஷிகளின் காரணத்தால், ஸ்வேதத்வீபத்தை விட்டு, வெங்கடாத்ரிக்கு

வந்து இருந்து, ஸ்ரீனிவாச கல்யாணத்திற்கு சம்பந்தப்பட்ட கதா பாகங்கள் ஆகியவற்றை வெளிப்படுத்துவதுடன், ஸ்ரீனிவாச க்ரீடாதி குணபூர்ண, சர்வத்ர வியாப்த, வ்யக்தாவ்யக்த என்னும் குணங்கள் தெரிய வருகின்றன.

ஸ்வாமி என்னும் விசேஷணங்கள், வாசுதேவ சொல்லுக்கு இருக்கும் 'சர்வக்ஞ' 'ப்ரகாஷமூர்த்தி' 'ப்ராணஸ்வரூப' ஆகிய அனைத்து அர்த்தங்களையும் குறிக்கின்றன. ப்ரசன்ன வெங்கட தாசரின் கீர்த்தனைகள் அனைத்தும் வேதாந்த சாரங்களைக் கொண்டதாகும். தயிர் கடைந்தால், வெண்ணெய் வருவதைப் போல, தாசரின் கீர்த்தனைகளிலிருந்து வேதாந்த பிரமேயங்கள் வெளிவருகின்றன.

## கோலு பத

### தசாவதாரங்களின் திவ்ய ரகசியம்

பிரசன்ன வெங்கட தாசர் 'கோலு காமனகெத்த கோலு வாய்கிளனொத்த கோலு ஆனந்த முனி பிடதிஹ கோலு' என்னும் பல்லவியினால் துவங்கி, 11 சரணங்கள் இருக்கும் ஒரு கீர்த்தனையை இயற்றியிருக்கிறார். இந்த கீர்த்தனையில் ஒவ்வொரு சரணத்திலும் ஒவ்வொரு அவதாரத்தைச் சொல்லி, 10 சரணங்களில் ஸ்ரீஹரியின் 10 அவதாரங்களை மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார். இந்த கீர்த்தனை தசாவதாரங்களின் ரகசியங்களை பிரதிபலிக்கும் கண்ணாடியாக இருக்கிறது.

மகாலட்சுமி, ஸ்ரீஹரியின் அந்தரங்க ஸ்ரேஷ்ட பக்தள். அவளின் வாழ்க்கை, ஸ்ரீஹரிக்கு அர்ப்பணிக்கப்பட்டது. ஸ்ரீஹரியை வணங்குவதில், ஸ்ரீதேவிக்கு சமமான சேவகர் இல்லை.

ஆவாவ தேஷதி ஆவாவ காலதி<br>
ஆவாவ ரூப தரிஸித கோலெ |<br>
ஆவாவ ரூப தரிஸித ஹரி மனோ<br>
பாவ திளிது தானுதிஸோளு கோலெ ||

என்று ஸ்ரீஹரியின் அனந்தானந்த ரூபங்களின் சேவைக்காக, அந்த தாய், அவனின் ஆணைக்கு ஏற்ப தானும் அனந்த ரூபங்களை ஏற்கிறாள். சில அவதாரங்களில் வியக்தளாகி, சில அவதாரங்களில் அவ்யக்தளாக இருந்து, சேவை செய்கிறாள். காயத்ரி மந்திர பிரதிபாத்யனான, ஸவித்ரு மண்டல மத்யவர்த்தியான நாராயணனுக்கு, கமலரூபத்தில் ஆசனமாக இருந்து, அவ்யக்தளாக சேவையை செய்து வருகிறாள்.

வேதவியாச அவதாரத்திலும்கூட மகாலட்சுமி, அந்த மகாமகிமனுக்கு கிருஷ்ணாஜின ரூபத்தில் ஆசனமாக சேவையை செய்திருக்கிறாள். அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவாதி ரூபங்களுக்கு ப்ரத்யட்சமாக ஷாந்தி, க்ருதி, ஜயா, மாயா ஆகிய ரூபங்களால் சேவை செய்கிறாள். பகவந்தனின் முக்கிய அவதாரங்கள் எனப்படும் மத்ஸ்ய, கூர்ம, வராஹ, நரசிம்ம, வாமன, பார்க்கவ, புத்த, கல்கி ரூபங்களுக்கு லட்சுமி, பத்னியின் ரூபத்தில் பிரத்யட்சமாகி தென்படுவதில்லை. அந்த தக்க நேரத்தில் வெளிப்பட்டு, காரியம் முடிந்தவுடனேயே மறைந்து விடுகிறாள். இந்த ரூபங்கள் அதிக காலங்களுக்கு காட்டிக் கொள்வதில்லை. ஆனாலும் இவை நித்யமானவை. பூர்ணமானவை. வாமன பரசுராம ரூபங்கள் பிரம்மசாரி ரூபங்கள். ராம கிருஷ்ண அவதாரங்களில் மட்டும் ரமாதேவி, சீதா, ருக்மிணி, சத்யபாமா ஆகிய ரூபங்களால் தோன்றினாள்.

ரமா நாராயணரின், அவரின் அவதாரங்கள் எனப்பட்ட சீதாராமரின் தாம்பத்ய ஜீவனத்தை, ஜீவரின் தாம்பத்யத்தைப் போல என்று புரிந்து கொள்ளக்கூடாது. நாராயணன் பூர்ணகாமன். நித்யத்ருப்தன். ஞானானந்த பரிபூர்ணன். ரமாதேவியரால் அவனுக்கு ஆனந்தம் வருவதில்லை.

அவனாலேயே ரமாபிரம்மாதிகளுக்கு ஆனந்தம். ஆகையால், காமனை உண்மையாக வென்றவன் அவனே. காம என்னும் சொல்லுக்கு ஸ்ருங்கார என்று மட்டும் அர்த்தமல்ல. காம என்னும் சொல், அனைத்து வித விருப்பங்களையும் குறிக்கின்றன.

ராமனுக்கு சீதை ஒருவளே மனைவி. கிருஷ்ணனுக்கு 16,108 பேர் மனைவியர். ஆனாலும், அவனை புராணங்கள் அஸ்கலித பிரம்மசாரி, அனாதி பிரம்மசாரி என்று சொல்கின்றன. எவ்விதமான விருப்பங்களும் இல்லாமல், வெறும் ஜீவர்களின் நலன்களுக்காக, அதர்ம மார்க்கத்தில் நடந்தவாறு, அதர்மத்திற்கு குறியீடாக இருந்த மாயாவிகளை, அழிப்பதற்காகவே பகவந்தனின் அனைத்து அவதாரங்களும் நடந்திருக்கின்றன. அதிலும், தசாவதாரங்கள், வெறும் இந்த மஹத் கார்ய சாதனைக்காகவே. இதனை அறிந்தே ஜகத்குருகளான ஆனந்ததீர்த்த பகவத்பாதர், நாராயணனின் பாதபத்மங்களை கெட்டியாக பிடித்துக்கொண்டார்.

ஹரிரேவ பரோ ஹரிரேவ குரு:
ஹரிரேவ ஜகத்பித்ரு மாத்ரு கதி:
நததோஸ்த்யபரம் ஜகதீட்யதமம்
பரமாத்பரத: புருஷோத்தமத:

என்று அனைத்து உலகிற்கும் உபதேசம் செய்தார். ஆசார்யரின் உபதேசத்தைக் கேட்ட பிரசன்ன வெங்கட தாசர், ஆசார்யர் காட்டிய வழியிலேயே நடந்தவாறு, அவரின் சத்யமான பிரமேயங்களை தானும் அனுபவித்து, தம் கீர்த்தனைகளின் மூலம் உலகிற்கும் பரப்பிய தன்யஜீவிகள். தசாவதாரங்களுக்கு சம்பந்தப்பட்ட கீர்த்தனையில் தசாவதாரங்களின் சரித்திரத்தை, அவற்றில் வரும் சந்தேகங்களுக்கான பரிகாரத்தையும், சில அபூர்வ பிரமேயங்களையும் கூறுகிறார். அவற்றில் சிலவற்றை மட்டும் சிறிது பார்ப்போம்.

இந்த கீர்த்தனையில் பிரசன்ன வெங்கட தாசர் தசாவதாரங்களை 10 சரணங்களில் வர்ணித்தவாறு, ஒவ்வொரு சரணத்தின் இறுதியிலும் அந்த அவதாரத்தின் பெயரை சொல்லியவாறு 'நம்ம மனெதெய்வ கோலே' என்று சொல்கிறார். இது ஒரு அபூர்வ பிரமேயத்திற்கான குறியீடாகும். பாரதீயர்களின் ஒவ்வொரு குடும்பத்திலும் ஒரு வீட்டு தெய்வம் / குல தெய்வம் என்ற பெயரில் யாரோ ஒரு தேவதையோ, தேவனோ ஆராத்ய தெய்வமாக இருக்கிறார். ஸ்ரீனிவாஸ (வெங்கடேச), நரசிம்ம, விட்டல, ராம, கிருஷ்ண, ஹனுமந்த, சுப்ரமண்ய, வீரபத்ர, சிவ என்னும் ஆண் தேவதைகள் குலதெய்வமாக இருப்பது பொதுவாக நாம் பார்ப்பது. பெண் தேவதைகளில் லட்சுமி, பார்வதி, துர்கா, பனசங்கரி, எல்லம்மா, சௌடேஸ்வரி - இவர்கள் குல / வீட்டு தேவதைகளாக இருக்கின்றனர்.

தசாவதாரங்களில் நரசிம்ம, ராம, கிருஷ்ணரைத் தவிர, மத்ஸ்ய, கூர்ம, வராக, வாமன, பரசுராம, புத்த, கல்கி ரூபங்கள் பாரதத்தின் எந்த பகுதி மக்களுக்கும் குலதெய்வங்களாகவோ, வீட்டு தெய்வங்களாகவோ இருப்பதாக தெரியவில்லை. ஆனால், தாசர் மேலே கூறிய மத்ஸ்ய கூர்ம வராக புத்தாதி ரூபங்களை நம் குலதெய்வ என்று சொல்லியிருக்கிறார். தாசரின் இப்படி கூறியிருப்பது நமது சிந்தனைகளை கிளறுகிறது. மத்ஸ்யாதி சில ரூபங்கள் குலதெய்வங்களாக இல்லை. அப்படியெனில், மத்ஸ்யாதி பகவத் ரூபங்கள் எந்த வீட்டுக்கு தெய்வங்கள்? அந்த வீடுகள் எவை? அத்தகைய வீடுகள் எவ்வளவு இருக்கின்றன? எங்கு இருக்கின்றன? இந்த அனைத்து கேள்விகளுக்கும் பதில் கிடைக்கவேண்டுமெனில், நாம் புறத்தில் தேடக்கூடாது. ஆத்யாத்ம உலகிற்கு செல்ல வேண்டும். ஸ்ருதி ஸ்ம்ருதி புராண ரகசியங்களை வெளிப்படுத்தும் ஹரிதாசர்களிடம் சரணடைய வேண்டும். ஹரிதாச சாகித்யத்தில் நுழைய வேண்டும். உபநிஷத்துகளின் பார்வையில், மனிதனின் தேகம் ஒரு கோயில்.

'தேஹோ தேவாலய: ப்ரோக்த: தேவாலய'. தேகம் என்பது, பகவந்தனின் சஞ்சாரத்திற்கு தகுதியான ஒரு திவ்ய ரதம். அவனின், அவனின் பரிவாரத்திற்கு வசிப்பதற்கு தகுதியான வீடுகளைக் கொண்ட அழகான பட்டணம். சம்சார சமுத்திரத்தில் அவனின் பயணத்திற்கு

தகுதியான ஒரு படகு. மனிதன் தனது அலங்காரத்திற்காக மூன்று விதமான ஆடைகளை அணிகிறான். ஒன்று சாதாரணமானவை. அடுத்து, சிறிது அதிக விலை உள்ளது. அடுத்தது, வெகு காலம் பயன்படக்கூடியவை. இதைப்போலவே, பகவந்தன்கூட மூன்று விதமான கோயில், ரதம், பட்டணங்களை நிர்மாணித்துக் கொண்டிருக்கிறான்.

ஒவ்வொரு மனிதனின் ஸ்தூல ஷரீரம் (பாஞ்சபௌதிக சரீரம்) தற்காலிகமானது. இது பகவந்தனே தனக்காக நிர்மாணித்துக் கொண்ட, அவனுடையதேயான அனேக வீடுகளைக் கொண்ட பட்டணம். இங்கு, ஜீவிக்கும் ஒரு இடம் கொடுத்து, சாதனை செய்து கொள்வதற்கு இடம் கொடுத்திருக்கிறான். இதைப் போல, அனிருத்த, லிங்க சரீரங்கள்கூட அவனின் பட்டணங்களே. இவை நீண்ட காலம் வாழ்பவை. மிகவும் பழைய பட்டணங்கள். ஆனால், கடைசியில் ஒரு நாள் நாசம் அடைபவை. இந்த மூன்று பட்டணங்களை ஜீவி ஏதோ ஒரு நாளில் விட்டுப் போகிறான்.

ஆனால், பகவந்தன் என்றைக்கும் விடாமல், அனாதியிலிருந்து இருக்கும், நித்யமான அவனின் பட்டணம் - ஜீவியின் ஸ்வரூப தேகம். ஜீவியின் ஸ்வரூப தேகம் என்னும் பட்டணம் - பகவந்தன் என்றைக்கும் வசிக்கும் பட்டணம் ஆகும். இந்த பட்டணத்தில் அவனுக்கு முக்கியமாக 11 வீடுகள் உள்ளன. அவை : கண், காது, மூக்கு, தோல், வாய், கை, கால், மல மூத்ர இந்திரியங்கள், மனஸ் ஆகியவை. உண்மையாக பார்த்தால், இந்த ஸ்வரூப தேகம் என்னும் பட்டணம், கண், காது என்னும் 11 வீடுகள், ஜீவிக்கு சம்பந்தப்பட்டவை ஆகும். ஜீவியின் உண்மையான ஆஸ்தி எனப்படும் இந்த பட்டண - வீடுகளில், அவனுக்கு நித்யானந்தத்தைக் கொடுப்பதற்கு, ஜீவியுடன் நிரந்தரமாக கருணாமூர்த்தியான பகவந்தன் வசிக்கிறான். நிரந்தரமில்லாத முதலாம் மூன்று பட்டணங்கள், பகவந்தனுக்கு சம்பந்தப்பட்டவை. ஜீவி வெறும் வாடகைக்கு இருப்பவர். ஸ்வரூப தேகம் மட்டும் ஜீவனுடையது. இங்கு ஜீவி வாடகைக்காரர் அல்ல. இத்தகைய ஜீவி ஸ்வரூப தேகம் என்னும் பட்டணத்தில் இருக்கும் கண், காது என்னும் வீடுகளில் வசிக்கும் பகவந்தன் உண்மையான குலதெய்வம். அனைத்து ஜீவர்களின் குலத்திற்கு ஸ்ரீஹரியே நிரந்தர குலதெய்வம். மற்றும் நிரந்தர மனெ-தெய்வ.

இந்த ஆத்யாத்ம சிந்தனையில் மூழ்கி மகிழ்ந்த பிரசன்ன வெங்கட தாசர், அனைத்து சாத்விக பிரபஞ்சத்திற்கு இந்த ஆனந்தத்தை பகிர்ந்தளிக்க வேண்டும் என்னும் நற்சிந்தனையினால், தசாவதார ங்களை வர்ணித்தவாறு, மத்ஸ்யாதி பகவத்ரூபங்களை 'நம்ம மனெதெய்வ' என்று சொல்லியிருக்கிறார்.

ஸ்தூல தேகத்தின் 10 இந்திரியங்களில் பகவந்தனின் வெவ்வேறு ரூபங்கள் உள்ளன. ஸ்வரூப தேகத்தின் 10 இந்திரியங்களில் மட்டும் மத்ஸ்யாதி ரூபங்களே உள்ளன. பிரசன்ன வெங்கட தாசர், இரு பொருள் வருமாறு, ஸ்வரூப தேகத்தின் 10 இந்திரியங்களில் மத்ஸ்யாதி 10 ரூபங்கள் இருக்கின்றன என்றும், அந்த 10 இந்திரியங்களே ஜீவியின் உண்மையான வீடுகள் என்றும், அந்த வீடுகளுக்கு மத்ஸ்யாதி தச ரூபங்களே உண்மையான தெய்வங்கள் என்றும் கூறுகிறார். பிரசன்ன வெங்கட தாசர் மூலமாக உந்துதலைப் பெற்ற ஸ்ரீஜகன்னாததாசர், இந்த பிரமேயங்களை தெளிவாக, தம் ஹரிகதாம்ருதசாரத்தில், பஞ்சாக்னிஹோத்ர சந்தியில் கூறியிருக்கிறார்.

மூலரூபனு மனதொளிஹ ஸ்ரவ
நாலியொளகிஹ மத்ஸ்ய கூர்மனு
கோலரூபனு த்வக்ரசன தொளகிப்ப நரசிம்ஹ |
பாலவடு வாமனனு நாசிக
நாளதொளு வதனதலி பார்க்கவ
வாலிபஞ்சன ஹஸ்ததொளு பாததலி ஸ்ரீகிருஷ்ண ||34

ஜினவிமோஹக புத்தபாயுக
தனுஜமர்த்தன கல்கி மேட்ரதி
இனிது தஷரூபகள தஷகரணங்களலி திளிது |
அனுபவிப விஷயகள க்ருஷ்ணா
ர்ப்பண வெனலு கைகொம்ப வ்ருஜினா
ர்த்தன வரஜகன்னாத விட்டல விஷ்வவியாபகனு ||35

ஜீவியின் ஸ்வரூப மனதில் - மூலரூபி நாராயணன் இருக்கிறான்.

ஸ்வரூப ஸ்ரவணேந்திரியத்தில் (காது) - மத்ஸ்ய
ஸ்வரூப நயனேந்திரியத்தில் (கண்) - கூர்ம
ஸ்வரூப த்வக் இந்திரியத்தில் (தோல்) - வராக
ஸ்வரூப ரஸனேந்திரியத்தில் (நாக்கு) - நரசிம்ம
ஸ்வரூப க்ராணேந்திரியத்தில் (மூக்கு) - வாமன
ஸ்வரூப தமனேந்திரியத்தில் (வாய்) - பரசுராம
ஸ்வரூப ஹஸ்தங்களில் (கைகள்) - ஸ்ரீராம
ஸ்வரூப பாதங்களில் (கால்) - ஸ்ரீகிருஷ்ண
ஸ்வரூப பாயுஇந்திரியத்தில் (மல) - புத்த
ஸ்வரூப உபஸ்தேந்திரியத்தில் (மூத்ர) - கல்கி

பிரசன்ன வெங்கட தாசரின் சிந்தனை மிகவும் அபூர்வமானவை. தாசர் 'நம் மனெதெய்வ' என்றதில் பன்மையில் 'நம்ம' என்னும் சொல்லை பயன்படுத்தியுள்ளார். சம்சார நிலையில் லௌகிகமாக ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு தேவதை மனெ தெய்வமாக இருக்கலாம். ஆத்மாத்ம பிரபஞ்சத்தில் அனைத்து ஜீவகோடிக்கு இந்த மத்ஸ்யாதி தச அவதாரங்களே மனெ தெய்வங்கள். இந்த நற்சிந்தனையில், மெய்மறந்து இந்த கிருதியைப் பாடி மகிழ்ந்தால், இந்தப் பாடலே நம்மை முக்தி மண்டபத்திற்கு அழைத்துச் செல்லும் புஷ்பக விமானம் ஆகின்றது.

தாசர் இந்த கீர்த்தனையின் ஒவ்வொரு சரணத்தின் முதலில் மூன்று பாதங்களில், தாம் சொல்லியிருக்கும் பகவத்ரூபத்தின் ஸ்ருதி - புராண பிரசித்தமான கதையின் பாகத்தை சொல்கிறார். பகவந்தன் அணுவில் மஹத்தினை அடக்கியிருக்கிறானாம். அதைப் போல, அவனின் கருணையின் உருவமான தாசர்கூட, மிகவும் சிறியதான மூன்று பாதங்களில், அவதாரத்தின் முக்கிய காரியங்களைக் கூறுகிறார். மூன்றாம் பாதமோ, இரண்டாம் பாதத்தையே திரும்ப சொல்கிறது. ராமாவதாரத்தின் வர்ணனையைக் கூடிய சரணத்தின் ஸ்வரூபம் இவ்வாறு உள்ளது.

கௌஸல்யெ கர்ப்பதி ஜனிஸித க்ருபெயல்லி
கௌஷிகக்ரதுவ காய்தனு கோலெ
கௌஷிகக்ரதுவ காய்த ராவணாந்தக
ஸ்ரீஸீதாராம மனெதெய்வ கோலெ ||

இந்த சரணத்தில் மொத்த ராமாயணத்தின் கதாபாகம் சுருக்கமாக சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த சரணத்தில் வ்ரும் 'க்ருபெயல்லி' என்னும் சொல், ராமாவதாரத்திற்கு சம்பந்தப்பட்ட பல காரணங்களை குறிக்கிறது. சாபம் பெற்ற ஜய விஜயர், இரண்டாம் பிறவியில் ராவண, கும்பகர்ணர்களாக பிறந்தனர். தன் த்வாரபாலகர்களை சாபத்திலிருந்து முக்தர்களாக செய்வதற்கு, அவர் மேல் உள்ள கருணையால், ஸ்வேதத்வீப மந்திரவாசியான பரவாசுதேவன், கௌஸல்யையின் கர்ப்பத்திலிருந்து பிறந்தான். ராவணாதிகளின் தொந்தரவுகளால் கஷ்டப்பட்ட தேவதைகள், தர்ம சம்ரட்சணைக்காக வாசுதேவனை பிரார்த்திக்க, அவர்களைக் காப்பாற்ற, அவர் மேல் உள்ள கருணையால், வாசுதேவன் கௌசல்யாவின் கர்ப்பத்தில் ராமனாக பிறந்து வந்தான்.

வசிஷ்ட ரிஷ்யஸ்ருங்கரின் தலைமையில் மக்களுக்காக புத்ர காமேஷ்டி முதலான யாகங்களை செய்த, தர்மாத்மனும், பக்தனும் ஆன தசரதன் மேல் உள்ள கருணையால், வாசுதேவன் ராமனாக பிறந்தான்.

அகலிகை, குகன், ஜடாயு, ஷபரி, அனுமன், ஸுக்ரீவ, விபீஷணாதி அனேக பக்தர்கள் கர்மபூமி எனப்படும் பாரதத்தில் பிறந்து, பகவந்தனின் வருகை, தரிசனத்திற்காக காத்திருந்தனர். இவர்களின் மேல் உள்ள கருணையால், இவர்களை மேம்படுத்துவதற்காக பகவந்தன், கௌஸல்யாவின் கர்ப்பத்தில் பிறந்து வந்தான். உலகத்து மக்களுக்கு நல்ல வாழ்க்கை முறையைப் பற்றி வழிகாட்டுவதற்காக, பகவந்தன் கருணையுடன் ராமனாக அவதரித்தான். முக்கியமாக துஷ்டர்களை அழித்தல், பக்தர்களை காத்தல், அதன் மூலன் அதர்மத்தை அழித்து, தர்மத்தை மறுபடி நிலைநாட்டுவதற்காக, பரபிரம்மன் வாசுதேவன் கருணையுடன் கௌஸல்யா கர்ப்பத்தில் ராமனாக அவதரித்து வந்தான். ராமனின் பிறப்பிற்கு காரணம் எனப்படும் இந்த அனைத்தையும் பிரசன்ன வெங்கட தாசர் 'க்ருபெயிந்த' என்னும் ஒரே வாக்கியத்தில் குறிப்பிட்டுள்ளார்.

ராமசந்திரன் முதன்முதலில் செய்த நற்செயல் என்றால், விஸ்வாமித்ரனின் யாகத்தை காத்தல். இந்த யாக காத்தலே அடுத்து வரும் ராமாயணத்தின் கதைக்கு துவக்கப்புள்ளியாக இருந்தது. யாகத்தைக் காப்பதற்கு புறப்பட்ட ராமன், துவக்கத்திலேயே தாடகியைக் கொன்று, மாரீச, சுபாஹு முதலிய அசுரர்களில் த்வேஷாக்னியை வளர்த்தான். யாகத்தைக் காக்கும் சமயத்தில் சுபாஹுவைக் கொன்று, மாரீசனை காயப்படுத்தி ராவணனை பயப்படுத்தினான். இதே ராமாயணத்தின் முக்கிய அம்சம் எனப்படும் ராவணாதி துஷ்ட சம்ஹாரத்திற்கு முக்கிய காரணம் ஆனது. ராவணாந்தகனான ராமன், ஶீதாபதி. இந்த சீதா, லட்சுமியின் அவதாரம் ஆவாள். இதைக் குறிப்பிடுவதற்காகவே, ஶ்ரீ என்னும் சொல்லை சீதைக்கு பொருத்தியிருக்கிறார் தாசராயர்.

இதற்கு திருப்தியாகாத தாசார்யர் சீதைக்கு ஶ்ரீ சொல்லை பயன்படுத்தியதைப் போல, ஶ்ரீசீதா என்னும் சொல்லை, ராமனுக்கு குறிப்பாக பயன்படுத்தியிருக்கிறார். இதனாலும் ஒரு சிறப்பு விளக்கப்படுகிறது. ராமன் நம் மனெதெய்வம். ஸ்வரூப தேகத்தின் ஹஸ்தேந்திரியங்கள் என்னும் மனெ' க்கு தெய்வம். இங்கு ராமன், தனியாக இருப்பதில்லை. சீதா சமேதனாக இருந்து, உபாசனை செய்பவர்களுக்கு தரிசனம் கொடுக்கிறான்.

ராமசீதையரை தனித்தனியாக உபாசிக்கக்கூடாது. ராமனை சீதா சமேதமாக, சீதையை ராமனுடன் சேர்த்தே உபாசிக்க வேண்டும். அவர்கள் இருவரும் நித்ய அவியோகிகள். இவர்களை தனித்தனியாக பூஜிப்பதை பகவந்தன் விரும்புவதில்லை. தம்பதிகளை சேர்த்து பூஜிப்பதே சரி. அபரோக்ஷ காலத்திலும், பிம்பரூபி பகவந்தன் லட்சுமிசஹிதனாகவே ஜீவிக்கு தரிசனம் அளிக்கிறான். இந்த அபூர்வ பிரமேயத்தின் அறிமுகத்திற்காகவே தாசார்யர் 'ஶ்ரீசீதாராம' என்னும் சொல்லினை பயன்படுத்தியிருக்கிறார்.

தாசார்யர், கீர்த்தனையின் சரணங்களில் கோலெ என்னும் கன்னட சொல்லினை பயன்படுத்தியிருக்கிறார். அதமாரு மடாதீசர் போன்ற அறிஞர்கள், அகராதிகளின் உதவியுடன் இந்த சொல்லிற்கு பல்வேறு புதிய அர்த்தங்களை சொல்லியிருக்கின்றனர். ராமாவதாரத்தைக் கூறும் இந்த சரணத்தில் இருக்கும் கோலெ என்னும் சொல்கூட, ராமனுக்கு சம்பந்தப்பட்ட அனேக விஷயங்களைக் குறிக்கிறது.

கோலெ என்னும் சொல்லில் க மற்றும் ல என்னும் இரு எழுத்துக்கள் உள்ளன. க-பற்றி அகராதி இவ்வாறு சொல்கிறது.

கோ பிரம்மாத்மனிலாகாக்னிசித்ததி யம கேகிஷு
விஷ்ணாவஹர ஷப்தெப்தௌ ஸிதவர்ணே வஸௌத்யுத்தா |
கம் ஷிரோம்புஸுகே க்லீபம் தத்ரைவ ச கமவ்யயம் ||

என்று கூறுகிறது. இந்த ஸ்லோகத்தின்படி, க: என்னும் எழுத்திற்கு முறையே, பிரம்ம, ஆத்ம, அனில (காற்று), அக்னி, சித்த, கேகி (மயில்), விஷ்ணு, அப்தி (கடல்), ஸிதவர்ண (வெள்ளை), வசு, த்யுதி (ஒளி), சிரஸ் (தலை), அம்பு (தண்ணீர்), சுக என்னும் அர்த்தங்கள் உள்ளன என்று சொல்கிறது.

இதைப் போலவே ல என்பதற்கு இவ்வாறு கூறுகிறது.

லோ தீப்தௌ த்யாம் லஸ்ச பூமௌபயே பாஹ்லாதனேபிச |
லோவாதே லவணே ச ஸ்யால்லோதானே ச ப்ரகீர்த்தித: |
ல:ஷ்லேஷே சாஷயே சைவ லகார: ஸாந்த்வனேபிச ||

இதன்படி, ல என்றால் : தீப்தி (ஒளி), பூமி, பயம், ஆஹ்லாதன (மகிழ்விப்பது), வாயு (காற்று), லவண (உப்பு), தான (பரிசு), ஆதரவு, அபிப்பிராயம், பிரளயம், ஸாதன, மனஸ், வருண, சமாதானம் செய்வது என்னும் பல அர்த்தங்கள் உள்ளன.
அகராதியின்படி க மற்றும் ல எழுத்துக்களின் அர்த்தங்களை சேர்த்தால், ராமனின் ஆளுமை மற்றும் குணங்களின் அறிமுகம் நமக்குக் கிடைக்கிறது.

கம் – வாயுபுத்திரனான ஹனுமந்தனை, லம் – ஆலிங்கனம் செய்ததால் மகிழ்ச்சிப்படுத்தியவன் ஸ்ரீராமன் என்னும் அர்த்தம் கோலெ என்னும் சொல்லில் கிடைக்கிறது. ஹனுமந்தன் சீதையை இலங்கையில் கண்டு, அவள் கொடுத்த சூடாமணியை கொண்டு வந்து ராமனிடம் கொடுத்தான். ஸ்ரீராமசந்திரன் மகிழ்ச்சியுடன் ஆஞ்சனேயனுக்குக் தன் ஆலிங்கனத்தைக் கொடுத்து, அவனை மகிழ்வித்தான். இந்த சூழ்நிலையை ஆசார்ய மத்வர் தன் சுந்தர காண்டத்தில் மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார்.

ராமோபி நான்யமனுதாது மமுப்ய யோக்ய
மத்யந்தபக்தி பரிதஸ்ய விலக்ஷ்ய கிஞ்சித்
ஸ்வாத்ம ப்ரதானமதிகம் பவனாத்மஜஸ்ய
குர்வன் சமாஷ்லிஷதமும் பரமாபிதுஷ்ட: ||

வாயுதேவனே த்ரேதா யுகத்தில் ஹனுமந்தனாக அவதரித்தான். இதனால் ஹனுமந்தன் வேறல்ல, வாயு வேறல்ல. வாயுதேவனைக் குறிக்கும் க எழுத்து, ஹனுமந்தனையும் குறிக்கிறது. ல – என்பதற்கு மகிழ்ச்சிப்படுத்துதல் என்னும் அர்த்தம் இருப்பதால், க குறிப்பதான ஹனுமந்தன், சூடாமணியை ராமனுக்குக் கொடுத்து ராமசந்திரனை மகிழ்ச்சிப்படுத்தினான் என்னும் அர்த்தம் கோலெ என்னும் சொல்லில் கிடைக்கிறது.

க எழுத்திற்கு மனஸ் என்று அர்த்தம். ஸ்ரீராமசந்திரன் தன்னை நம்பிய அனைவரின் மனதினையும், ல மகிழ்ச்சிப்படுத்துகிறான். இதனை ராமாயணம் முழுவதுமே நாம் பார்க்கலாம்.

க எழுத்திற்கு கடல் என்று அர்த்தம். இலங்கைக்குச் செல்ல வழிகாட்ட வேண்டும் என்று ஸ்ரீராமசந்திரன் சமுத்திரராஜனை பிரார்த்தனை செய்தான். சமுத்திரராஜன் அதற்கு பதில் கொடுக்காமல் இருக்கிறான். அப்போது ராமசந்திரன் சமுத்திரத்தின் மேல் பாணம் விடத் தயாரானான். சமுத்திரராஜன் பயந்து, தன் உண்மையான ரூபத்தினால் வந்து ராமசந்திரனிடம் சரணடைந்தான். அப்போது ராமசந்திரன் அவனின் தவறினை மன்னிக்கிறான். இந்த சம்பவத்தை கோலெ என்னும் சொல்லினால் விளக்குகிறார். க – சமுத்திரனை அவனின் அனைத்து தவறுகளையும் மன்னித்து, ல – சிஷ்யனாக ஏற்றுக் கொள்கிறான்.

க எழுத்துக்கு தேஜஸ் என்று அர்த்தம். ல எழுத்துக்கு ஆதரவு என்று அர்த்தம். இப்படி சிந்தித்தால், ஸ்ரீராமசந்திரன் தேஜஸ்ஸிற்கு ஆதரவு அளிக்கிறான் என்னும் அர்த்தம் கிடைக்கிறது.

ராமசந்திரனின் தேஜஸ்ஸினைக் கண்டு தைத்யர்கள்கூட மயங்கி நின்ற சந்தர்ப்பங்களை ராமாயணத்தில் நாம் பார்க்கிறோம். தேஜஸ்ஸிற்கு ராமசந்திரன் ல – ஆதரவு.

இவ்வாறு பிரசன்ன வெங்கட தாசரின் கீர்த்தனைகள், அனேக வேதாந்த பிரமேயங்களுக்கு இடமாக, பல அர்த்தங்களை விளக்குவதாக இருக்கிறது. இதுவரை, பிரசன்ன வெங்கட தாசரின் சாஹித்ய அழகினை மேலோட்டமாக பார்த்தோம். இப்போது, அனைவருக்கும் மிகவும் பிடித்தமான, தாசர் ஸ்ரீனிவாசனுடன் பேசுவதாகவே இருக்கும், மிகவும் அழகான 'பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாஸ, என்ன துடிஸி கொள்ளெலோ ஸ்ரீனிவாஸ' என்னும் கீர்த்தனையை பார்ப்போம்.

பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாஸ

பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாஸ என்ன
துடிஸி கொள்ளெலோ ஸ்ரீனிவாஸ நின்ன
நுடியே ஜிதல்லோ ஸ்ரீனிவாஸ நன்ன
நடெதப்பு காயோ ஸ்ரீனிவாஸ || பல்லவி

படியோ பென்னலி ஸ்ரீனிவாஸ எ
ந்னொடல ஹொய்யதிரோ ஸ்ரீனிவாஸ நா
படவ காணெலோ ஸ்ரீனிவாஸ நி
ன்னொடல ஹொக்கெனோ ஸ்ரீனிவாஸ ||1
பஞ்சு பிடிவெனோ ஸ்ரீனிவாஸ நி
ந்னெஞ்சல பளதும்பெ ஸ்ரீனிவாஸ நா
ஸஞ்செ உதயகெ ஸ்ரீனிவாஸ கா
ளஞ்செய பிடிவே ஸ்ரீனிவாஸ ||2

ஸத்திகெ சாமர ஸ்ரீனிவாஸ நா
நெத்தி நலிவனோ ஸ்ரீனிவாஸ நின்ன
ரத்னத ஹாவிகெ ஸ்ரீனிவாஸ நா
ஹொத்து குணிவெனோ ஸ்ரீனிவாஸ ||3

ஹேளிதந்தாலிஹெ ஸ்ரீனிவாஸ நி
ந்னாளிகாளாகிஹெ ஸ்ரீனிவாஸ அவ
ரொளிகவ மாள்பெ ஸ்ரீனிவாஸ என்ன
பாலிஸோ பிடதே ஸ்ரீனிவாஸ ||4

நின்ன நாம ஹோளிகெ ஸ்ரீனிவாஸ கள்ள
குன்னி நானாகிஹெ ஸ்ரீனிவாஸ கட்டி
நின்னவரொத்தரெ ஸ்ரீனிவாஸ நன்ன
கின்னு லஜ்ஜேதகெ ஸ்ரீனிவாஸ ||5

பீஸிகொல்லலவரெ ஸ்ரீனிவாஸ முத்ரெ
காஸி சுச்சலவரெ ஸ்ரீனிவாஸ மிக்க
காஸிகஞ்செனய்ய ஸ்ரீனிவாஸ எஞ்ச
லாஸெய பண்ட நா ஸ்ரீனிவாஸ ||6

ஹேஸி நானாதரெ ஸ்ரீனிவாஸ ஹரி
தாஸரொளு பொக்கெ ஸ்ரீனிவாஸ அவர
பாஷெய கேளிஹெ ஸ்ரீனிவாஸ ஆ
வாஸிய ஸைரிஸோ ஸ்ரீனிவாஸ ||7

திங்களவனல்ல ஸ்ரீனிவாஸ வத்ஸ
ரங்களவனல்ல ஸ்ரீனிவாஸ ரா
ஜங்கள ஸவடிபெ ஸ்ரீனிவாஸ ப
வங்கள தாடுவெ ஸ்ரீனிவாஸ ||8

நின்னவ நின்னவ ஸ்ரீனிவாஸ நா
நன்யவனரியெனோ ஸ்ரீனிவாஸ அய்யா
மன்னிஸோ தாய்தந்தெ ஸ்ரீனிவாஸ ப்ர
ஸன்ன வெங்கடாத்ரி ஸ்ரீனிவாஸ ||9

இது பிரசன்ன வெங்கட தாசரின் இதயத்தின் ஆழத்திலிருந்து வெளிவந்த அழகான கீர்த்தனை. இதில் ஆத்ம அர்ப்பணம் இருக்கிறது. பிரார்த்தனை இருக்கிறது. தாசரின் பக்குவ இதயத்திற்கு இந்த கீர்த்தனை சாட்சியாக இருக்கிறது.

இந்த கீர்த்தனையில் தாசர், 40 முறை ஸ்ரீனிவாஸ என்று சொல்லியிருக்கிறார். இது புனருக்தி அல்ல (திரும்பத்திரும்ப சொல்லும் தோஷம்). ஒரே சொல்லை மறுபடி மறுபடி சொல்வதால், அதனை அழுத்தமாக சொல்வது என்று அறிய வேண்டும். அதன் சிறப்பினைக் குறித்து கவனம் செல்கிறது. இதனால் அது மிகவும் சிறப்பு வாய்ந்ததாகி, கண்டிப்பாக சிந்திக்கத் தக்கதாகி, பிறவிப்பயனுக்காக அதன் முக்கியத்துவம் தெரிய வருகிறது. பகவந்தனின் நாமம் எப்போதும் நினைக்கத்தக்கது. 'ஸந்ததம் சிந்தயேனந்தம்' என்று ஆசார்ய மத்வர் இதனை வலியுறுத்தியிருக்கிறார்.

பகவந்தனின் நாமஸ்மரணைக்கு சமானமான யக்ஞம் இல்லை. விரதம் இல்லை. தர்மங்கள் இல்லை. தானங்கள் இல்லை. பகவன் நாம சங்கீர்த்தனை, சிந்தனை, ஸ்மரணை, அனுசந்தானங்கள் இல்லாத எந்த கர்மங்களும் நிறைவு பெறுவதில்லை. நாம சங்கீர்த்தனையை செய்யும் மனிதன், மகாபாக்யவந்தன். அவனின் புண்ணியத்திற்கு ஈடில்லை. அவனுக்கு யமதூதர்கள் யமதர்ம ராஜன், யமலோக இவை மிகவும் தூரம் ஆகிறது. நாமத்திற்கு இருக்கும் மகிமை அபாரமானது. இந்த நாம மகிமையினாலேயே பரம பாபியான அஜாமிளன் பாசக்கயிற்றிலிருந்து முக்தனாகி, கடைசியில் வைகுண்டத்தை அடைந்தான். பிரகலாதன், கஜேந்திரன், த்ரௌபதி ஆகியோர், இந்த நாம ஸங்கீர்த்தனையினாலேயே இந்த சம்சார சாகரத்தை சுலபமாக தாண்டினர். மகாருத்ர தேவர், ராம நாமத்தை நுடித்தவாறு, சிந்தித்தவாறு, ஆனந்த சாகரத்தில் மூழ்கியிருக்கிறார்.

புராணங்கள், பகவன் நாம மகிமையை தழுதழுத்த குரலில் புகழ்ந்திருக்கின்றன. யாராக இருக்கட்டும், எந்த நிலையாவது இருக்கட்டும், எப்படியாவது இருக்கட்டும், பகவன் நாம சங்கீர்த்தனை செய்தால் போதும். அத்தகைய மனிதனின் அனைத்து பாவங்களும் நொடிப்பொழுதில் சுட்டுப் பொசுங்குகிறது. துக்கங்கள் தூரம் ஆகின்றன. கைவல்யம் கைவசம் ஆகிறது. இந்த அனைத்து விஷயங்களையும் ஆதித்ய புராணம், கீழ்க்கண்டவாறு தெளிவாக விளக்கியிருக்கிறது.

யாத்ரா யக்ஞா வ்ரதா தர்மா தானான்யன்யான்யயா
தவ நாமஸ்ம்ருதேர்பக்த்யா கலாம் நார்ஹந்தி ஷோடஷீம் |
மஹாத்ம்யம் விஷ்ணு நாம்னோஹி வர்ணிதும் கேனஷக்யதெ
அஜாமிலோ ம்ருத்யுபாஷாத் முக்தோ வைகுண்டகோ யத: ||

நைகோ அஜாமில எவ பாபஜலதிம் ஸந்தீர்ணவான்னாமத:
ப்ரஹ்லாதோபி கஜேந்திர பூர்வ பஹவோ துக்காம்புதேஸ்தாரிதா:
யன்னாமஸ்மரணாம்ருதாப்தி நிமக்னோ அத்யாபி கௌரீபதி:
அக்ஞானாததவா தம்பாத் புண்யஸ்லோகஸ்ய நாமதே
யோவதேத் தானி நஷ்யந்தி தூலராஷிர் யதானலாத் ||

ஶ்ரீஜகன்னாததாசரும்:

ஶ்ரீமுகுந்தன பரமமங்கள
நாம நரகஸ்தரனு ஸலஹிது
பாமரர பண்டிதரெனிஸி புருஷார்த்த கொடுதிஹுது

என்று கூறி, ஹரிநாமத்தின் மகிமையை விளக்கியிருக்கிறார். ஶ்ரீநிவாஸனின் நாம சங்கீர்த்தனைக்கு தேச, கால, நிலைகள் எதுவாக இருந்தாலும் பரவாயில்லை. அனைத்து காலங்கள், அனைத்து தேசங்கள், அனைத்து நிலைகளும் நாம சங்கீர்த்தனைக்கு தக்கதாகவே இருக்கின்றன. விஷயங்களின் சம்பந்தத்தினாலேயே, துஷ்டரின் சம்பந்தத்தினாலேயே, தோஷம் கொண்ட தேச, கால, நிலைகள், ஹரிஸ்மரணையினால் பவித்ரம் ஆகின்றன. ஹரிஸ்மரணை இல்லாவிட்டால், அதுவே அ-பவித்ரம் ஆகிறது. காரணம் எப்போதும் சங்கீர்த்தனையில் காலத்தைக் கழிக்க வேண்டும். அப்படி இருப்பவனின் முன், பின், இடது, வலது, உள்ளே, வெளியே என அனைத்து இடங்களிலும் ஶ்ரீஹரி இருந்து அருள்வான். இதையே ஜகன்னாததாசர்,

மலகுவாகலி ஏளுவாகலி
குளிது மாதாடுதலி மனெயொளு
கெலஸகள மாடுதலி மைதொளெவாக மெலுவாக |
கலுஷதூரன ஸகலடாவிலி
திளியெ தத்தன் நாம ரூபவ
பளியலிப்பனு ஒந்தரக்ஷண பிட்டகலனவர ||

என்று விளக்கியிருக்கிறார். பகவன் நாமத்திற்கு இருக்கும் மகிமை அபாரமானது. விஜயதாசர், தம் ஒரு சுளாதியில் நாராயண நாமத்திற்கு இருக்கும் சக்தியை, மிகவும் அழகாக விளக்கியிருக்கிறார்.

நா எந்து நுடியலு நானா நரகனாஷ
ரா எந்து பேளலு ராமபதவியக்கு
ய எந்து வர்ணிஸலு எல்ல காலதல்லி
ஸ்ரேயஸ்ஸினல்லி ஆனந்தக்கெ அபிவ்ருத்தி
ண எந்ததர பலவாரு பேளுவரய்ய
பூவ்யோம பாதாள மத்யதல்லி
ராமா மஹிஷ்வாஸா விஜயவிட்டலன்ன
காயன மாள்பன்ன மதிகெ நமோ நமோ ||

நாராயண நாம எழுத்துக்களின் மகிமையை, விஜயதாசரைப் போல வர்ணிப்பவர் வேறு யாரும் இல்லை. நாராயண நாமத்தில் இருக்கும் நா என்னும் முதல் எழுத்தை சொல்வதால், நரகங்கள் தூரமாகின்றன. அதாவது, தெரிந்தோ தெரியாமலோ, காயேன வாசா மனஸா மற்றும் 10 இந்திரியங்களால் செய்த பாவங்கள் அனைத்தும் நாசம் ஆகின்றன. இதனால் சாதகன் சுத்த அந்த:கரணனாகி, ஞான வைராக்ய பக்திகளைக் கொண்டு, பிம்ப அபரோக்ஷத்தைப் பெற்று, பிராரப்தத்தை அனுபவித்து, ஜீவன் முக்தன் ஆகிறான். இந்த அனைத்தும் வெறும் நா எழுத்தின் உச்சாரணை செய்வதாலேயே ஆகிறது.

அடுத்து ரா என்னும் இரண்டாம் எழுத்தின் உச்சாரணையால் வைகுண்டமே கிடைக்கிறது. நாராயண மஹா மந்திரத்தில் இருக்கும் ய எழுத்தின் உச்சாரணையினால், முக்தியில் அனுபவிக்க வேண்டிய ஆனந்தம் வளர்கிறது. விஜயதாசர், முக்தியை 'ஸ்ரேயஸ்ஸினலி' என்று கூறுகிறார். இந்த பலனுக்கு மேல் வேறொரு பலன் இல்லை. முக்தி சாம்ராஜ்யத்தின் ஆனந்தமே இறுதியான ஆனந்தம்.

அடுத்து கடைசியான 'ண' வின் பலனைச் சொல்வது சாத்தியமே இல்லை. அதனால், விஜயதாசர், 'ணா என்றால் என்ன பலனைக் கேட்பது?' என்று கை விரித்துவிட்டார். இவ்வாறு பகவந்தனின் நாமஸ்மரணையினால் கிடைக்கும் பலன்களை சொல்லி விளக்கமுடியாது. விஜயதாசர் ஹரிநாமத்தினால் கட்டப்பட்ட ஒரு பெரிய பட்டணத்தையே தம் ஒரு சுளாதியின் த்ருவ தாளத்தில் விளக்கியிருக்கிறார்.

ஹரிநாம ப்ரஹ்லாதன்ன மொரெ கேளி ஒதகிது
ஹரிநாம கஜேந்திரன்ன ஆ விபத்து ஹரிஸிது
ஹரிநாம அஜாமிளன பாப கெடஸிது
ஹரிநாம நாரதன நீசயோனி பிடிஸிது
ஹரிநாம பீஷ்மன்ன பந்தவ கெலிஸிது
ஹரிநாம அம்பரீஷன்ன விரதவ ஸம்ரக்ஷிஸிது
ஹரிநாம விபீஷணனன்னு பட்டதல்லிட்டிது
ஹரிநாம த்ரௌபதிய மானவெ காயிது
ஹரிநாம த்ருவன தபஸ்ஸிகெ ஒலியிது
ஹரிநாம அஹல்யாஷாபவ ஹிங்கிஸிது
ஹரிநாம பலிந்ருபன இந்திரன்ன மாடிது
ஹரிநாம குசேலன்ன தாரித்ர்ய களெயிது
ஹரிநாம விதுரன்னக்ஷீரக்கெ ஹிக்கிது
ஹரிநாம தேவகிய பந்தன பிடிஸிது
ஹரிநாம ப்ரார்தன்ன ஜீவவே உளிஸிது
ஹரிநாம ஜனகன்ன த்ருட மாடினோடிது
ஹரிநாம புண்டரீகன பக்திகெ மெச்சிது
ஹரிநாம குருபுத்ரன்ன திருகி பதுகிஸிது
ஹரிநாம வால்மீகன்ன முனிபனெந்தெனிஸிது
ஹரிநாம பூமிய உத்தாரகெய்ஸிது
ஹரிநாம பரிபரி பக்தரொடனாடிது
ஹரிநாம ஒந்திரலு அன்ய உபாயவே?
ஹரிநாம சமஸ்த பய நிவாரணவய்ய
ஹரிநாம மனஸ்ஸிகெ நிர்மலகாரண
ஹரிநாம ஸர்வதேவதெகளிந் ததிகவு
ஹரிநாம ஜகதொளு அகண்டவாகிப்பதோ
ஹரிநாம அஜபவாதிகளிகெ கதிப்ரத
ஹரிநாம மஹிமெ ஆரு பண்ணிபரய்ய
ஹரி ஹரி ஹரி எந்து நெனெதொடெ ரோகங்களு
உருளி ஹோகுவவு நீனு கேளொஎலோ கேளோ
ஹரிநாம ஸகல ப்ராயஸ்சித்தக்கெ மொதலு
ஹரிநாம விரலாகி மத்தொந்தபேக்ஷவே
ஹரிநாம நிஜஸ்வாமி விஜயவிட்டலனங்க்ரி
பரிஷுத்தனாகி எள்ளினிது மனதல்லிடோ

விஜயதாசருக்கு ஹரி நாமத்தை எவ்வளவு முறை கூறினாலும், திருப்தி ஆவதாகத் தெரிவதில்லை. அதையே திரும்பத்திரும்பச் சொல்லி, அதன் மகிமையை, அதன்

முக்கியத்துவத்தை தெளிவுபடுத்துகிறார். ஹரிதாசரின் சிந்தனை ஒரே மாதிரியாகவே இருக்கிறது. இதற்கு காரணம், அவரின் ஹரிமயமான மனம், புத்தி மற்றும் ஆசார்ய மத்வரின் சித்தாந்தத்தில் அவருக்கு இருக்கும் தீட்சை. விஜயதாசரின் இந்த சுளாதிக்கு, பிரசன்ன வெங்கட தாசரின் 'பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாஸ' என்னும் கீர்த்தனையே உந்துதலாக இருக்கலாம்.

ஆசார்ய மத்வர் 'க்ருஷ்ணாம்ருத மஹார்ணவத்தில் ஹரிநாம மகிமை'யை, அதன் அவசியத்தையும், அதனால் கிடைக்கும் பற்பல பலன்களையும், விளக்கமாக வர்ணித்திருக்கிறார்.

பிரசன்ன வெங்கட தாசர், ஆசார்யர் காட்டிய வழியிலேயே நடந்தவாறு, ஸ்ரீனிவாஸ நாமாம்ருத பானத்தினால் மயங்கி, புளகாங்கிதராகி, இந்த கிருதியில் ஒவ்வொரு சரணத்திற்கு நான்கு முறையாக, 10 சரணங்களில் 40 முறை ஸ்ரீனிவாஸ நாமத்தைக் கூறியிருக்கிறார்.

இந்த 40 முறை கூறிய ஸ்ரீனிவாஸ நாம சங்கீர்த்தனையின் பின்னணியில் பிரசன்ன வெங்கட தாசர் ஒரு அபூர்வ பிரமேயத்தை நமக்குக் கூறுகிறார்.

ஸ்ருஷ்டிக்கு வந்த ஒவ்வொரு ஜீவியும் முதன்முதலில் த்ரிகுணங்களால் கட்டுப்படுகிறான். இதையே லிங்க சரீரம் என்று சொல்லலாம். இந்த த்ரிகுணங்களின் விகாரங்களே அவ்யக்தாதி 24 தத்வங்கள். இந்த தத்வங்களே இரண்டாம் கட்டு (பந்தக) ஆகும். இந்த த்ரிகுணங்களின் மற்றும் 24 தத்வங்களின் பந்தனத்தினால் ஜீவி, துவக்கத்தில் அரிஷட் வர்க்கங்களைக் கொண்டவனாகிறான். காம, கிரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்ய – இவையே அரிஷட்வர்க்கங்கள். இந்த அரிஷட் வர்க்கங்களின் பிரபாவத்தினால் ஜீவி பாவ கர்மங்களை செய்துகொண்டே போகிறான். பாவ கர்மத்தினால் பாவம் வளர்கிறது. பாவங்களில் மிகப்பெரிய பாவங்கள் என்பது ஐந்து. அதையே ஞானிகள் பஞ்சமஹா பாதகங்கள் என்று சொல்கின்றனர். இவற்றினால் ஜீவி, பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியில் சிக்கி தவிக்கிறான். இந்த அனைத்து பந்தனங்களிலிருந்து விடுதலை என்பது பகவத் நாம சங்கீர்த்தனையினாலேயே ஆகிறது.

த்ரிகுணங்கள் – 3 ; தத்வங்கள் – 24 ; அரிஷட்வர்க்கங்கள் – 6 ; பஞ்சமஹாபாதகங்கள் – 5 ; பிறப்பு, இறப்பு – 2 ; மொத்தம் = 40

இந்த 40லிருந்தும் விடுதலை, ஸ்ரீனிவாச நாமஸ்மரணையினாலேயே என்று குறிப்பதற்காகவே, தாசார்யர், இந்த கீர்த்தனையில் ஸ்ரீனிவாஸ நாமத்தை 40 முறை கூறியிருக்கிறார். எப்போதும் செய்யும் ஸ்ரீனிவாசனின் நாம சங்கீர்த்தனையால், முதலில் காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்யங்கள் விலகுகின்றன. அரிஷட்வர்க்கங்கள் விலக்கிய ஜீவி எவ்விதமான பாவங்களையும் செய்வதில்லை. அவன் பாவங்களிலிருந்து விலகி, பகவத் சம்பந்தமான மற்றும் பகவத் ஆணையை வளர்க்கும் புண்ணிய கர்மங்களையே பகவத் ப்ரேரணையினால் எப்போதும் செய்கிறான். இதனால், பந்தகங்களான த்ரிகுணங்களோ, த்ரிகுண ஜன்யங்களான 24 தத்வங்களோ, இவனை கட்டுப்படுத்துவதில்லை.

மாறாக அவை சத்சாதனைகளுக்கு வழிகாட்டுகின்றன. அரிஷட்வர்க்கங்களின் கையில் சிக்கும் ஜீவி, நயனேந்திரியங்களால் (கண்) வெறும் பிரபஞ்சத்தின் பொருட்களை பார்த்தால், அரிஷட்வர்கங்களை விலக்கிய ஜீவி, பிரபஞ்சத்தின் பதார்த்தங்களை பார்த்தவாறு, அவற்றின் அந்தர்யாமியான பகவந்தனைக்கூட கண்டு மகிழ்கிறான். இதைப்போலவே, அவனின் மற்ற இந்திரியங்களும் பகவந்தன் சேவையிலே ஈடுபடுகின்றன. கடைசியில், ஜனன மரணங்களிலிருந்து விலகி அவன் முக்தன் ஆகிறான். இந்த அபூர்வ பிரமேயத்தை ஸ்ரீனிவாஸனின் நாமாவளிகளை திரும்பத்திரும்ப சொல்லி புரியவைத்த பிரசன்ன வெங்கட தாசர், கீர்த்தனையின் துவக்கத்தில் 'பிடெனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாஸ' என்று கூறி தம் தீக்ஷையை வெளிப்படுத்துகிறார்.

பல்லவியின் துவக்கத்தின் இந்த பாதத்தின் தாசார்யர் 'ஸ்ரீனிவாஸனே, உன் அங்க்ரியை நான் விடுவதில்லை' என்கிறார். இங்கு அங்க்ரி மற்றும் ஸ்ரீனிவாஸ ஆகிய சொற்கள், ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டவை. உலகில் மானவர்கள் அனைவரும் செல்வத்திற்கு மகிழ்வர். செல்வத்தை ஈட்டுவதற்காக அனைத்து முயற்சிகளையும் செய்கிறார்கள். செல்வம் இரு விதம். ஒன்று லௌகிக. இன்னொன்று பாரமார்த்திக. லௌகிக செல்வம் துவக்கத்தில் சுகத்தைக் கொடுத்தாலும், கடைசியில் துக்கத்தையே கொடுக்கிறது. இரண்டாவதான பாரமார்த்திக செல்வம், எப்போதும் சுகத்தையே கொடுக்கிறது. அபாரமான சுகத்தைக் கொடுக்கிறது. இதனை அறிந்துகொண்டவர் பிரசன்ன வெங்கட தாசர். ஸ்ரீனிவாசனின் பாதங்கள் செல்வத்தைக் கொடுக்கின்றன. இதனைக் குறிப்பதற்காகவே தாசார்யர் அங்க்ரி என்னும் சொல்லினை, ஸ்ரீனிவாஸ சொல்லின் அருகில் வைத்தார்.

இந்த இரு சொற்களையும், தனித்தனி சொற்களாகவும் பார்க்கலாம். ஒரே சொல்லாகவும் சேர்த்து பார்க்கலாம். தனித்தனி சொற்களாக பார்த்தால், ஸ்ரீனிவாஸ சொல், அங்க்ரி சொல்லுக்கு விசேஷண (குணம்) சொல்லாக இருக்கிறது. அப்போது, ஸ்ரீனிவாசனின் பாதம், ஸ்ரீ'க்கு அதாவது செல்வத்திற்கு இருப்பிடமாக இருக்கிறது என்னும் அர்த்தம் வருகிறது. ஸ்ரீ என்றால், செல்வம். குண-ரூபங்கள் பகவந்தனின் உண்மையான செல்வங்கள். மகாலட்சுமி அவனின் செல்வம். சேதனாசேதனாத்மகமான பிரபஞ்சம் அனைத்தும் அவனின் செல்வங்களே. ஷ்வேதத்வீப, வைகுண்ட, அனந்தாஸனங்கள் அவனின் செல்வங்களே. இந்த அனைத்து செல்வங்களும் பகவந்தனின் பாதத்திலேயே இருக்கின்றன. பகவந்தனின் பாதங்களை விடாமல், கெட்டியாக பிடித்துக்கொண்டால், மேற்கண்ட அனைத்து செல்வங்களும் தாமாகவே கிடைக்கின்றன.

அதற்காகவே பிரசன்ன வெங்கட தாசர், 'ஸ்ரீனிவாஸனே, உன் கருணை என்னும் குணசம்பத், எனக்கு கிடைக்க வேண்டும். அனைத்து வேதங்களுக்கு அபிமானியாகி, வித்யாதி தேவதை என்று பிரசித்தளான மகாலட்சுமியின் அருட்செல்வம்கூட எனக்கு கிடைக்க வேண்டும். ரமாத்மகளும், செல்வத்தின் குறியீடும் ஆன உன் உண்மையான செல்வங்கள் எனப்படும், ஷ்வேதத்வீப, அனந்தாஸன, வைகுண்ட என்னும் லோகரூப செல்வங்கள் எனக்கு கிடைக்க வேண்டும். இவை கிடைப்பதற்காக உன் பாதங்களை பிடிக்கிறேன். அவற்றை என்றும் விடுவதில்லை என்று கூறுகிறார்.

ஜீவி – அஸ்வதந்த்ர என்பது உண்மை. ஸ்ரீஹரி ஒருவனே ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரன். 'ஸ்வதந்த்ரனாதனு ஸர்வத ஸ்ரீஹரி – அஸ்வதந்த்ரஜீவரனுகால கோலெ'. தாசர், 'ஸ்ரீனிவாஸ நின்னங்க்ரி பிடெனோ' என்று சொல்லி, தம்மில் ஸ்வாதந்த்ர்யத்தை சொல்வதாக தெரிகிறது. ஸ்ரீனிவாஸ சொல்லினை இன்னொரு அர்த்தத்தில் சிந்தித்தால், இதற்கு சந்தர்ப்பம் இருப்பதில்லை. ஸ்ரீனிவாஸ, என்று அழைத்த தாசார்யர், இந்த சொல்லினாலேயே தம் அஸ்வதந்த்ரத்தை, ஸ்ரீனிவாஸ பிரபுவின் சர்வதந்த்ர ஸ்வதந்த்ரத்தை தெளிவுபடுத்துகிறார். ஸ்ரீ என்பது இந்திரியத்தைக் குறிக்கிறது.

தா ஏதாஹ ஸ்ரீர்ஷஞுப்ரிய: ஸ்ரீதாஷசக்ஷு: |
ஸ்ரோத்ரம் மனோவாக் ப்ராண: ஸ்ரயந்தே ஸ்மிம்ப்ரிய:

இது ஐதரேய உபநிஷத்தின் வசனம். கண், காது, மனஸ், வாக், ப்ராண இவை 'ஸ்ரீ' சொல்லினால் குறிப்பிடப்படுகிறது. இத்தகைய ஸ்ரீ சொல்லினால் அழைக்கப்படும் இந்திரியங்களில் எப்போதும் வசிக்கும் காரணத்தால், பகவந்தனுக்கு ஸ்ரீனிவாஸ என்று பெயர். 'ஸ்ரீஷு இந்திரியேஷு நிதராம் வஸதி இதி ஸ்ரீனிவாஸ:' – இந்திரியங்களில் பகவந்தன் வீணாக இருப்பவன் இல்லை. இந்திரியங்களில் இருந்து, இந்திரியாபிமானி தேவதைகளுக்கு ஆணையைக் கொடுத்து, ஜீவியின் தகுதிக்கு ஏற்ப, இந்திரியங்களின் செயல்களை செய்கிறான். இந்த ப்ரமேயத்தை அறிந்த பிரசன்ன வெங்கட தாசர் 'ஸ்ரீனிவாஸனே, என் மனஸ் என்னும் இந்திரியத்திற்கு ப்ரேரகனான நீயே' அஸ்வதந்த்ரனான என் மனதிற்கு ப்ரேரணை செய்து, உன் பாதங்களை விடாமல் பிடிப்பதற்கு

ஆணையிடுகிறாய். உன் ஆணைக்கு ஏற்பவே நான் 'பிடெனோ நின்னங்க்ரி ஶ்ரீனிவாஸ' என்று சொல்கிறேன்.

பாமர மானவனான எனக்கு ஸ்வாதந்த்ர்யம் எங்கிருந்து வந்தது? ஒருவனில் நின்று செயல்களை செய்கிறாய். இன்னொருவனில் நின்று பார்க்கிறாய். ஒருவனில் நின்று வேண்டுகிறாய். இன்னொருவனில் நின்று கொடுக்கிறாய். நீயே அனைவருக்குமான தெய்வம். அனைத்திற்கும் நீயே மூல காரணம்.

பிடெனோ – என்னும் சொல்லின் கடைசியில் இருக்கும் நெடில், பிரசன்ன வெங்கட தாசரின் திடமான மனதினை சொல்கிறது. இந்த திடம் மற்றும் நிஸ்சயத்திற்கு, பாதத்தில் இருக்கும் செல்வங்கள் ஆகியன என்றால், பாதத்தில் இருக்கும் அழகு இரண்டாவது. ஶ்ரீனிவாசனின் பாத அழகிற்கு அனைத்து தேவதைகளும் மயங்கியிருக்கின்றனர்.

ஜகன்னாதனின் பாதத்தின் அற்புத அழகினைக் கண்ட ஜகன்மாதையான மகாலட்சுமி, ஶ்ரீ, பூ, துர்கா ரூபங்களால் பாதங்களை வணங்குகிறாள். நான்கு முகங்களைக் கொண்ட பிரம்மன், பரமாத்மனின் பாதங்களின் அழகினைக் காண, தன் எட்டு கண்கள் போதாதென்று, அனேக ரூபங்களைக் கொண்டு, அந்த அழகினை பருகி வருகிறான். ஆயிரம் வதனங்களைக் கொண்ட சேஷன் தன் ஆயிரக்கணக்கான கண்களால் ஸ்வாமியின் பாத அழகினை பார்த்து ரசித்தவாறு, மகா ஆனந்த சாகரத்தில் மூழ்கியிருக்கிறான். ஆதித்ய புராணத்தில் உள்ள வெங்கடேச மகாத்ம்யத்தில் இந்த அனைத்து விஷயங்களும் தெளிவாக கூறப்பட்டுள்ளது.

வக்ஷஸ்தாபி ரமாதேவி தவ பாதாம்புஜே ஸ்திதம்
ஸௌந்தர்யமத்புதம் த்ருஷ்ட்வா ஸுந்தரி மோஹிதா அபவத் |
ஶ்ரீஸுந்தர ஶ்ரீனிவாஸ நாபிஸ்த: சதுரானன:
தவ பாதாம்புஜெ ரம்யே ஸௌந்தர்யே லக்னமானஸ: |
அஷ்ட நேத்ர்யா திவாராத்ரம் பஷ்யன் ஸௌந்தர்யமத்புதம்
நாலம் நேத்ராஷ்டகமிதி பஹுரூபி ததாபவத் |
சேஷோ பஹுஸஹஸ்ராக்ஷ: ஸர்வதாதி ப்ரியோ ஹரே:
நேத்ரை: பஹுஸஹஸ்ரைஸ்ச லக்ஷ்மீபதி பதாம்புஜே
அஸமம் சித்ரஸௌந்தர்யம் த்ருஷ்ட்வாத்ருஷ்ட்வா புன: புன: |
மஹானந்தா புதௌ மக்ன: ...........

முதலாம் பாதத்தில் 'ஶ்ரீனிவாஸ' சொல்லினால் தம் அஸ்வதந்த்ர்யத்தை இரு விதங்களில் விளக்கிய தாசார்யர், 'என்ன துடிஸிகொள்ளெலோ ஶ்ரீனிவாஸ' என்னும் இரண்டாம் பாதத்தினால் ஜீவர் அஸ்வதந்த்ரர் என்னும் பிரமேயத்தை சொல்கிறார். அப்படியே இந்த பாதத்தினால் ஜீவ பரமாத்மரின் நடுவில் இருக்கும் தாச-ஈஷ பாவத்தினைக்கூட விளக்குகிறார்.

பகவான் ஜீவனின் இந்திரியங்களுக்கு ஆணை அளித்து, தன்னுடைய சேவையை செய்து கொண்டால் மட்டுமே அவனுக்கு சேவா பாக்கியம் கிடைக்கிறது. அந்த சுவாமி சாதகனின் கண்ணில் நின்று, தன்னுடைய உருவத்தை பார்க்க வேண்டும்; காதில் நின்று தன்னுடைய கதையை கேட்க வைக்க வேண்டும்; மூக்கில் நின்று அஸ்வினி தேவதைகள் மூலம் தன்னுடைய நிர்மால்யத்தை முகருமாறும்; நாக்கினில் நின்று தன்னுடைய பிரசாதத்தை ஏற்றுக் கொள்ளுமாறும்; வாயில் நின்று தன்னுடைய நாம சங்கீர்த்தனம் செய்து கொள்ளுமாறும்; கைகளில் நின்று தன்னுடைய பூஜையை செய்யுமாறும்; கால்களில் நின்று தன்னுடைய தீர்த்த க்ஷேத்திரங்களுக்குப் போகுமாறும்; பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்யுமாறும் செய்ய வேண்டும். இதனை அறிந்த தாசர், 'ஹே ஶ்ரீனிவாசனே, என்னை உன்னுடைய சேவகனாக ஏற்றுக்கொண்டு, என்னைக் காப்பாற்று' என்று பிரார்த்தனை செய்கிறார். சேவை செய்பவன் எப்பொழுதும் சேவகன் ஆகவே இருக்கிறான். பெற்றுக் கொள்பவன் சுவாமியாக இருக்கிறான். ஜீவ பரமனின் நடுவில் இருக்கும் இந்த தாச-ஈஷ பாவம், அனாதியானது. நிரந்தரமானது. ஜீவி, தான் பகவானின் தாசன்

என்பதை மறந்து இருக்கிறான். இந்த சிந்தனையையும் பகவானே அருளவேண்டும். இதனை நன்றாக அறிந்த புரந்தரதாசர்..

தாஸன்ன மாடிகோ என்ன ஸ்வாமி
ஸாஸிர நாமத வெங்கடரமணா...

என்று பிரார்த்தனை செய்கிறார்.

'நின்ன நுடியே ஜிதல்லோ ஶ்ரீனிவாஸ' என்பது மூன்றாவது பத்தி. இதில் வேறு சில பாட பேதங்களும் இருக்கின்றன. ஜிதல்லோ என்று ஒரு இடத்தில் இருந்தால் வேறு புத்தகங்களில் இது ஜீதல்லோ என்றும் இருக்கிறது. ஜிதல்லோ என்றால் 'திடம் அல்லவா' 'நிச்சயம் அல்லவா' என்னும் அர்த்தங்கள் உள்ளன. ஜீதல்லோ என்பதற்கு சம்பளம் என்று அர்த்தம்.

இரண்டாம் பாதத்தில் தாசர், 'ஹே ஶ்ரீனிவாசனே, என்னை தாசனாக ஏற்றுக்கொள்' என்று பிரார்த்தனை செய்கிறார். பாவங்கள் இல்லாத இந்த அந்தக்கரணம் கொண்ட ஜீவனுக்கு மட்டும் பகவானின் தாஸ்யம் கிடைக்கிறது. ஆனால் ஜீவி மூன்று குணங்களின் சக்தியினாலும், அவனை கட்டுப்படுத்தும் உலக விஷயங்களாலும், தவறுகளை செய்து கொண்டே இருக்கிறான். ஒவ்வொரு நொடியிலும் நிறைய பாவங்களையே செய்கிறான். இதையே ஶ்ரீவிஜயீந்திர தீர்த்தர், தம்முடைய பாப விமோசன ஸ்தோத்திரத்தில் இந்த வரிகளை சொல்கிறார்.

ஸுக்ருதம் திலமாத்ரமிஷ | க்ரியதே நைவ மன்யைகவத்ஸரேபி
அபிது க்ரியதெ ஸதாகமோக: ப்ரதிமாமம் ஸகலேந்த்ரியை: முகுந்தா |
ரமயாப்யகணய்ய வஸ்துஜாதம் த்விவிதம் ப்ராஹுரமந்தபுத்திபாஜ:

தவ ஸத்குணஜாதமேகமன்யத் மம
துர்வாரதுரந்த பாபஜாதம் |

'ஸ்வாமி நாராயணனே, முழு ஆண்டில் சிறிதாவது புண்ணியம் செய்யும் நான், ஒவ்வொரு யாமத்திலும், பாவங்களின் முட்டையையே சம்பாதிக்கிறேன். ஹே முகுந்தனே. ரமாதேவியாலும் எண்ணுவதற்கு சாத்தியமில்லாத பொருட்கள் இந்த உலகில் 2 இருக்கின்றன. ஒன்று, உன்னுடைய அனந்த கல்யாண குணங்கள். இன்னொன்று என்னுடைய பாவங்கள்'. ஞானிகளின் வாக்கிக்கேற்ப, ஜீவிகளின் பாவங்கள் ஏறிக்கொண்டே செல்கின்றன. இந்த பாவங்களிலிருந்து விடுதலை என்பது வெறும் பகவானின் நாமஸ்மரணையால் மட்டுமே சாத்தியம். பகவான் மிகவும் கருணைக்கடல் ஆனவன். அவன் தன்னை நினைக்கும் பக்தனின் தவறுகளை கணக்கில் கொள்வதே இல்லை.

ஸ்மரிஸுவவபராதகள தா
ஸ்மரிஸ ஸகலேஷ்ட பிரதாயக

பாபகர்மவ ஸஹிஸுவடெ லகுமி
பதிகெ ஸமராத திவிஜர
நீ பயோஜபவாண்டதொளகாவல்லெ நா காணே

இது ஶ்ரீஜகன்னாததாசர் பகவானின் கருணையை விவரித்தவாறு கூறிய பத்யம். பகவான் தானே, 'நமே பக்த: ப்ரணஸ்யதி'. என்னுடைய பக்தன் எவ்வளவு பாவங்களை செய்திருந்தாலும், அவனை நான் எப்பொழுதும் காக்கிறேன் என்று கூறி, தன்னுடைய பக்தர்களுக்கு நம்பிக்கை அளிக்கிறான். பகவானின் பேச்சு அனைத்து காலங்களிலும் உண்மையானது. திடமானது. இதையே பிரசன்ன வேங்கட தாசர், 'நின்ன நுடியெ ஜிதல்லோ ஶ்ரீனிவாஸ' என்று கூறி

விளக்குகிறார். இந்த அனைத்து அர்த்தங்களும், திடம், சத்தியம் என்னும் அர்த்தங்களில் இருக்கும் ஜித சொல்லின் பாடத்தையே உணர்த்துகிறது என்று அறிய வேண்டும்.

ஆனால் ஜீத என்று சொல்லும் பாடம் கூட, ஒரு பார்வையில் சரியாகவே இருக்கிறது. ஸ்ரீனிவாசனை வணங்கினால், 'இந்த உன்னுடைய சேவைக்கு என் அங்கீகாரமே மிகப் பெரிய சம்பளம். என்னுடைய பெரிய சாம்ராஜ்யத்தில், உனக்கு சேவை செய்வதற்கு சந்தர்ப்பம் கொடுத்திருக்கிறேன்' என்று நீ கூறினால் மட்டுமே போதும். இந்த அர்த்தங்கள், சம்பளம் என்னும் அர்த்தத்தில் சொல்லப்படும் ஜீத சொல்லும் பாடத்தை ஏற்றுக்கொண்டால் மட்டுமே சாத்தியம். ஆனால் தாசர் நான்காம் பாதத்தில், 'என்னுடைய நடவடிக்கைகளை மன்னித்து அருள்வாயாக' என்று சொல்வதால், ஜித என்னும் பாடமே பிரசன்ன வெங்கட தாசர் ஒப்புக்கொண்ட பாடம் என்று அறியவேண்டும்.

படிலோ நின்னலி ஸ்ரீனிவாஸ எ
ந்னொடல ஹொய்யதிரோ ஸ்ரீனிவாஸ நா
படவ காணெலோ ஸ்ரீனிவாஸ நி
ந்னொடல ஹொக்கெனோ ஸ்ரீனிவாஸ ||

இந்த சரணத்தில் தாசராயர், 'ஹே ஸ்ரீனிவாசனே, நான் செய்த தவறுகளுக்கு தண்டனை கொடு. (படியோ பென்னல்லி ஸ்ரீனிவாஸ). என் வயிற்றில் மட்டும் அடிக்காதே' என்று பிரார்த்தனை செய்கிறார். 'படியோ பென்னலி ஸ்ரீனிவாஸ' என்னும் பாதம், இன்னொரு அர்த்தத்தை சொல்கிறது. குழந்தை பயப்பட்டால் பெற்றோர் அதனுடைய முதுகில் தட்டி, பயப்படாதே என்று ஆறுதல் கூறுவர். இதைப் போலவே பாவங்களை செய்து அவற்றிலிருந்து வெளியேவரத் துடிக்கும் ஜீவியை பகவான், பயப்படாதே என்று முதுகில் தட்டி, சமாதானம் செய்கிறான். இது பகவானின் உண்மையான குணம்.

மூன்றாம் பாதத்தில் தாசராயர், 'நா படவ காணெலோ ஸ்ரீனிவாஸ' என்று கூறி, தம்மை ஏழையாக எண்ணி பாடியிருக்கிறார். இந்த வாதம் அனைத்து காலங்களுக்கும் பொருந்துவதாகும். அனாதியிலிருந்து, பகவானுடன் அவனுடைய அதீனத்தில், உலகம் அனைத்திலும் கணக்கில்லா எண்ணிக்கையில் நிரம்பியிருக்கும், படைக்கப்பட்ட மற்றும் படைக்கப்படாத ஜீவர்கள் அனைவரும், ஏழைகளை. அவன் தானே சம்பாதித்த எந்த பொருளும் இந்த உலகத்தில் இல்லை. இந்த உலகில் இருக்கும் அனைத்து பொருட்களும், பகவானுடையதே ஆகும். இதையே ஈசாவாஸ்ய உபநிஷத் இவ்வாறு கூறுகிறது.

ஈஷாவாஸ்யமிதம் ஸர்வம் யத்கிஞ்ச ஜகத்யாம் ஜகத் |
தேன த்யக்தேன புஞ்சீதா: மாக்ருத: கஸ்யஸ்வித்தனம் ||

பொதுவாக அனைத்து அறிஞர்களும் தம்முடைய கீர்த்தனைகளில் தம்மை ஏழை என்றே சொல்லிக் கொள்கின்றனர். ஸ்வரூப தேகம் மட்டுமே ஜீவனுடைய செல்வம். அவன் அனாதி காலத்திலிருந்து பெற்றுக் கொண்டு வந்த செல்வம். மற்ற அனைத்து பொருட்களும் பகவானுக்கு சம்பந்தப்பட்டவை. பகவான் மட்டும் எந்த பொருளையும் தன்னுடைய சொந்த திருப்திக்காக பயன்படுத்துபவன் அல்ல. அனைத்தையும் ஜீவர்களுக்கெனவே படைத்திருக்கிறான். இது உண்மை. இந்த உண்மையை குறிப்பதற்காகவே, தாசர், தம்மை ஏழை என்று சொல்லிக்கொண்டவாறு 'நா படவ காணெலோ ஸ்ரீனிவாஸ' என்று கூறுகிறார்.

ஏழையான ஜீவிகள் செல்வந்தனான ஸ்ரீனிவாசனையே அடைக்கலம் அடைய வேண்டும். அப்பொழுது மட்டுமே சுகம் கிடைக்கிறது. இதனை அறிந்த பிரசன்ன வெங்கட தாசர் 'நின்னொடல ஹொக்கெனோ ஸ்ரீனிவாஸ' என்று கூறுகிறார். சரணாகதி என்பது ஜீவியின் முக்கிய கடமையாகும். சரணடைந்தவர்களை காப்பதே தன்னுடைய முக்கிய கடமையாக வைத்திருப்பவன் ஸ்ரீனிவாசன்.

பஞ்சு பிடிவெனோ ஸ்ரீனிவாஸ நி
ந்னெஞ்சல பளதும்பெ ஸ்ரீனிவாஸ நா
ஸஞ்செ உதயகெ ஸ்ரீனிவாஸ கா
ளஞ்செய பிடிவே ஸ்ரீனிவாஸ ||2

ஸத்திகெ சாமர ஸ்ரீனிவாஸ நா
நெத்தி நலிவனோ ஸ்ரீனிவாஸ நின்ன
ரத்னத ஹாவிகெ ஸ்ரீனிவாஸ நா
ஹொத்து குணிவெனோ ஸ்ரீனிவாஸ ||3

பல்லவி மற்றும் முதலாம் சரணத்தில் தாசர், 'ஹே ஸ்ரீனிவாசனே, செல்வங்கள் நிறைந்த உன்னுடைய பாதங்களை நான் விடுவதில்லை. என்னுடைய தவறுகளை எண்ணாமல், என் மூலமாக சேவையை பெற்றுக் கொள். 'ந மே பக்த: ப்ரணஷ்யதி' என்னும் நித்ய உண்மையான வாக்கினை நம்பி வாழ்கிறேன். என்னுடைய தவறுகளை மன்னித்தவாறு, தைரியம் அளிப்பதற்காக என் முதுகில் தட்டு. நான் செய்த தவறுகளுக்கு தண்டனை கொடு. உன்னையே சரணடைகிறேன். என்னிடம் இருப்பவை எதுவும் நான் சொந்தமாக சம்பாதித்தது அல்ல. நான் அனாதியிலிருந்து ஏழை. ஞானம், பக்தி, வைராக்கியங்கள் இல்லாத கடும் ஏழை' என்று சொல்லியவாறு, இந்த இரண்டாம் மற்றும் மூன்றாம் சரணங்களில் தாம் சுவாமி ஸ்ரீனிவாசனுக்கு செய்ய விரும்பும் சேவைகளை விவரிக்கிறார்.

'ஹே ஸ்ரீனிவாசனே, கோடி சூரியன்களின் ஒளியைக் கொண்ட உனக்கு முன்னால் நான் தீபத்தை பிடித்துக் கொண்டு நிற்கிறேன். உன்னுடைய பிரசாதத்தை அன்புடன் ஏற்றுக் கொள்கிறேன். உன்னுடைய பக்கத்தில், உனக்கு அனுகூலம் ஆகுமாறு உன்னுடைய தாம்பூலத்தை துப்பும் பாத்திரத்தை பிடித்துக் கொண்டு இருக்கிறேன். உனக்கு வெள்ளை குடையை பிடித்து, சாமரங்களை வீசியவாறு மனதில் மகிழ்கிறேன். உன்னுடைய ரத்ன பாதுகைகளை எப்பொழுதும் தலையில் ஏந்தியவாறு மகிழ்ச்சி அடைந்து நடனம் ஆடியவாறு உனக்கு பின்னால் வருகிறேன்' என்று சொல்கிறார்.

தாசர் இந்த இரண்டு சரணங்களில் பயன்படுத்திய பஞ்சு, பிரசாத, காளஞ்சி, ஸூத்திகெ, சாமர, ரத்னதஹாவுகெ – ஆகிய சொற்கள் மிகவும் அர்த்தம் நிறைந்தவை. பஞ்சு என்றால் தீவட்டி. தீபம் என்பது ஞானத்தின் குறியீடு. பகவானை ஞானத்தின் ஒளியில் பார்க்கவேண்டும். நியாயம் இல்லாத மனிதனில் வைராக்கியம், பக்தி ஆகியவை வருவதில்லை. பகவானின் தரிசனத்திற்கு தியானத்துடன் பக்தியே முக்கிய காரணம். இந்த அர்த்தத்திலேயே தாசார்யர், 'ஹே ஸ்ரீனிவாசனே, ஞானத்தின் தீபத்தை பிடிக்கிறேன். உன்னுடைய ஆணை வடிவங்களான, ஸ்ருதி, ஸ்மிருதி, புராணம், வேதங்களால் அறியப்படும் சுத்த ஞான மார்க்கத்தில் நடந்து, நான் தன்யன் ஆகிறேன்'.

உண்மையான ஞானிக்கு பகவத் சங்கல்பத்திற்கேற்ப, வாழ்க்கையில் கிடைக்கும் சுக துக்கங்களை – பிரசாதங்கள் என்று அறிவார்கள். அவன் சுக துக்கங்களை பகவானின் பிரசாத ரூபத்தில் அனுபவிக்கிறான். தாசர் பயன்படுத்திய 'எஞ்சலு' சொல்லுக்கு பிரசாதம் என்று அர்த்தம். பகவானிடமிருந்து கிடைக்கும் யோகம், போகம், ஐஸ்வர்யம், ஏழ்மை, சுகம், துக்கம் என அனைத்தும் உண்மையான அர்த்தத்தில் அவருடைய பிரசாதங்களே. இதனை நன்றாக அறிந்தவர்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன்,

சுகவாகலி பஹு துக்கவாகலி சக நீனாகிரு பாண்டுரங்க

நின்ன சித்தக்கெ பந்துதென்ன சித்தக்கெ பரலி

மானாபிமானவு நின்னதோ எனகேனோ

இட்டாங்கே இருவேனோ ஹரியே என்ன தொரெயே

என்று கூறுகின்றனர். கனகதாசரும் கூட...

தனு நின்னது ஜீவன நின்னது
அனுதினதலி பாஹோ சுகதுக்க நின்னதய்யா

என்று கூறி, பகவந்தன் ஜீவியின் மேம்பாட்டிற்காக, அவனின் சாதனைக்காக, அவனின் பிராரப்த கர்மங்களின் பலனாக, சுக துக்கங்களை பிரசாத ரூபத்தில் கருணிக்கிறான் என்னும் பிரமேயத்தை நிரூபிக்கிறார்.

ஹரி சர்வோத்தமன்; வாயு ஜீவோத்தமன்; பஞ்சபேத சத்ய; சேதனா சேதனாத்மகமான ஜகத் அனைத்தும் ஸ்ரீஹரிக்கு அதீனமானவை. உலகிற்கு ஸ்வாதந்த்ர்யமே இல்லை. ஸ்ரீஹரியே அனைத்தையும் நிர்வகிப்பவன், நடத்துபவன். வியாப்க-வியாப்த, சேவ்ய-சேவ்ய என்னும் திவ்ய ஞானத்தினால் வந்த அனைத்தையும், கோவிந்தனின் பிரசாதம் என்று அனுபவித்தவாறு ஸ்ரீஹரிக்கு தாசானுதாசன் ஆகிறான்.

அவன் 'தாஸோஹம் தவ தாஸோஹம் வாசுதேவ விகதாகசங்க தவ தாஸோஹம் தவ தாஸோஹம்' என்று பாடியவாறு, ஆடிய வாறு, மகிழ்ச்சியில் இருக்கிறான். இத்தகைய பக்தனுக்கு, பகவந்த னுக்கு சம்பந்தப்பட்ட அனைத்து சேவைகளும் அபூர்வமானவையே. அனைத்து சேவைகளும் நல்வழிகளே. பகவத் சேவைகளில் நீச-உச்சங்கள் என எதுவும் இல்லை. இதனை அறிந்த தன்ய ஜீவிகள் - பிரசன்ன வெங்கட தாசர். அதற்காகவே தாசர் 'ஸ்ரீனிவாச நா ஸஞ்செ உதயக்கெ காளஞ்சிய பிடிதெ' என்று பாடியிருக்கிறார். கர்வம் இல்லாதவனாக, மரியாதையின் குறியீடான தாஸஜீவி, ஹரி தாஸ்யத்தின் சுவையை அனுபவித்தவாறு, ஹரிசேவையிலேயே வாழ்க்கையை கழிக்கிறான்.

அவனின் நடை உடை பாவனைகள் அனைத்தும் பகவந்தனை நோக்கியே இருக்கின்றன. அவனின் மனம், இந்திரியங்கள், புத்தி அனைத்தும் ஸ்ரீஹரிசேவைக்காக இருந்து, அவற்றையே தொடர்ந்து செய்து கொண்டிருக்கின்றன. இத்தகைய தாசன், தன் மனதினை வெள்ளைக் குடையைப் போல பரப்பி, ஸ்வாமியின் சேவைக்காகவே தன் பொழுதைக் கழிக்கிறான். தன் இந்திரியங்களை சாமரங்களாக ஆக்குகிறான். புத்தியில் பகவந்தனின் பாதங்களை வைத்து, எப்போதும் மானசிகமாக மகிழ்ச்சியடைந்தவாறு நடனமாடுகிறான். பிரசன்ன வெங்கட தாசரும், இத்தகைய ஹரிதாசரே. தம் அந்தரங்கத்தின் இந்த பாவங்களை இவ்வாறு வெளிப்படுத்துகிறார்.

ஸத்திகெ சாமர ஸ்ரீனிவாஸ நா
நெத்தி நலிவனோ ஸ்ரீனிவாஸ நின்ன
ரத்னத ஹாவிகெ ஸ்ரீனிவாஸ நா
ஹொத்து குணிவெனோ ஸ்ரீனிவாஸ ||3

இதுவே, வேறு சில புத்தகங்களில் இவ்வாறு அச்சாகி இருக்கிறது.

ஸத்திகெ சாமர ஸ்ரீனிவாஸ நா
நெத்தி குணிவெனோ ஸ்ரீனிவாஸ நின்ன
ரத்னத ஹாவிகெ ஸ்ரீனிவாஸ நா
ஹொத்து நலிவெனோ ஸ்ரீனிவாஸ ||3

பகவந்தனுக்கு சேவை செய்வதற்காக குடை, சாமரங்களைப் பிடித்து நடனமாடினால், அவற்றால் உண்டாக வேண்டிய பலன் முழுமையாக கிடைப்பதில்லை. இவற்றின் சேவை முழுமையாக பகவந்தனிடம் சமர்ப்பிக்கப்பட வேண்டுமெனில், அவற்றைப் பிடித்தபோது மானசிகமாக குதித்தவாறு, புறத்தில் ஆடியவாறு இருக்க வேண்டும். குணிவெனோ / நலிவேனோ என்னும் இரு சொற்களின் வேறுபாடு உள்ளது. குணிவேனோ என்பது தாண்டவத்திற்கு ஈடானது. நலிவேனோ என்பது நாட்டியத்திற்கு ஒப்பானது. குணிவேனோ என்பதில் ஆர்ப்பாட்டம் உள்ளது. நலிவேனோ என்பதில் ஒரு நளினம் உள்ளது. இதனால் தாசர், இரண்டாம் பாதத்தில் நலிவேனோ

என்றும் நான்காம் பாதத்தில் குணிவேனோ என்னும் சொற்களை பயன்படுத்தியிருக்கிறார். இது வெறும் ஊகம் மட்டுமே.

ஹேளிதந்தாலிஹெ ஶ்ரீனிவாஸ நி
ந்னாளிகாளாகிஹெ ஶ்ரீனிவாஸ அவ
ரூளிகவ மாள்பெ ஶ்ரீனிவாஸ என்ன
பாலிஸோ பிடதெ ஶ்ரீனிவாஸ ||

இது கீர்த்தனையின் நான்காம் சரணம். அழகான சரணம். பல அர்த்தங்களை விளக்கும் சரணம்.

'ஸ்ருதீர்ஸ்ம்ருதீ ஹரேராக்ஞே' என்னும் வாக்கியத்திற்கேற்ப ஸ்ருதி ஸ்ம்ருதி புராணங்களில் கூறியபடி, பகவத் ஆராதனா ரூபங்களான சத்கர்மங்களை அனுசரிக்க வேண்டும். தந்தை தாய்களை பகவந்தனின் பிரதிமைகளாக சிந்தித்து, பக்தியுடன் அவர்களுக்கு சேவை செய்ய வேண்டும். எப்போதும் தர்ம மார்க்கத்தில் நடந்தவாறு, ஷமதமாதி குணங்களைக் கொண்டு வாழவேண்டும்.

'ஷுனி சைவ ஸ்வபாகே ச பண்டிதா: ஸமதர்ஷின:' என்னும் கீதா வாக்கியத்தின் வசனத்திற்கேற்ப, அனைத்து இடங்களிலும் பகவந்தனை பார்த்தவாறு, யாரையும் த்வேஷிக்காமல், அனைவரிடமும் அன்பு செலுத்தியவாறு, த்வேஷ முதலான துர்குணங்களை விட்டவாறு வாழ வேண்டும்.

'பந்தஷ்டரிந்தல்லெ பாளிகோ, கோவிந்த நின்னவனெந்து கேளிகோ' என்று சொல்வதைப் போல, நாளைக்கு எப்படி வாழ்வது என்று சிந்திக்காமல், பகவந்தன் கொடுத்திருப்பதை வைத்து திருப்தியுடன் இருந்து, என்னுடைய ஸ்வாமி ஶ்ரீஹரி என்று சொல்லியவாறு, சஜ்ஜனர்களின் சங்கத்தில் வாழ வேண்டும். இது அனைத்தும் ஶ்ரீஹரியின் ஆணைகளே. இந்த அனைத்தையும் தம் வாழ்க்கையில் செய்து காட்டிய பிரசன்ன வெங்கட தாசர், நாமும் அப்படியே வாழ வேண்டும் என்று செய்தியை சொல்கிறார்.

தன் பக்தர்களில் பக்தி செய்யும் மனிதரில் பகவந்தனுக்கு மிகவும் அன்பு உண்டாகிறது. இதனை நன்றாக அறிந்த தாசார்யர்,
நின்னாளிகாளாகிஹெ ஶ்ரீனிவாஸ | அவ
ரொளிகவா மாள்பெ ஶ்ரீனிவாஸ

என்று சொல்கிறார். இந்த சரணத்தில் தாசார்யர் கண்ட இன்னொரு அபூர்வமும் உண்டு.

பகவந்தனின் தாசர்களில் மிகவும் சிறந்த தாசர்கள் இருவர். அவரே பிரம்ம வாயுகள். பிரம்மதேவருக்கு அவதாரங்கள் இல்லை. வாயுதேவர் ஶ்ரீஹரியின் ஆணையை தலைமேல் ஏற்று, சாத்விக மக்களின் மேம்பாட்டிற்காக, துஷ்ட ஜனரின் அழிவிற்காக ஹனும பீம மத்வராக அவதரித்தார். ஹனுமபீம அவதாரங்கள் பல-(bala) அவதாரங்கள். துஷ்டர்களை அழிப்பதற்காக வந்த அவதாரங்கள். ஶ்ரீமத் ஆனந்தபகவத் பாதரின் அவதாரம் ஞான அவதாரம். ஸ்ருதி ஸ்ம்ருதி புராணங்களுக்கு, வியாசருக்கு சம்மதமான அர்த்தங்களை சொல்லி, சஜ்ஜனர்களை ஹரியின் உலகிற்கு கொண்டு சேர்ப்பதற்கு வந்த அவதாரம்.

ஹரியே சர்வோத்தமன், ஜகத் சத்ய. ஜீவர்கள் பரஸ்பர பேதம் கொண்டவர்கள். அனைவரும் ஹரியின் ஆணைக்கு கட்டுப்பட்டு, அவனின் வசத்தில் இருந்து வாழ்கின்றனர். சாத்விக ராஜஸ தாமஸ பேதத்தினால் பின்னரான ஜீவர்கள் அனைவரும், தரதம பாவம் உள்ளவர்கள். ஸ்வஸ்வரூபானந்த பாவமே முக்தி. இந்த முக்தியின் பிராப்திக்கு பக்தியே முக்கிய சாதனம் என்னும் இந்த நவ தத்வ ரத்னங்களை தன் கிரந்தங்களின் மூலம் உலகிற்குக் கூறிய ஜகத்குரு, ஆனந்ததீர்த்தர். இந்த நிஜ தத்வங்களின் ஞானத்தினாலேயே ஶ்ரீஹரியின் அருள் கிடைக்கிறது. சம்சார பந்தனத்திலிருந்து விடுதலை கிடைக்கிறது.

இந்த அனைத்தையும் அறிந்து, அனுபவத்தில் வைத்துக்கொண்ட பிரசன்ன வெங்கட தாசர், தம் ஸ்வாமியான ஸ்ரீனிவாசனிடம் இவ்வாறு கேட்டுக் கொண்டார். 'ஹே ஸ்ரீனிவாஸனே. உனக்கு முக்கிய பக்தர் எனப்படும் ஆசார்ய மத்வருக்கு நான் பக்தனாக இருக்கிறேன். அவரின் சேவகனாக இருக்கிறேன். அவர் காட்டிய வழியில் நான் நடக்கிறேன். அவரின், அவரின் கிரந்தங்களின் சேவையை, காயேன, வாசா, மனஸா எப்போதும் செய்து கொண்டிருக்கிறேன். என்னை காப்பாற்று. இதுவே இந்த சரணத்தின் உண்மையான அர்த்தம்.

இந்த சரணத்தின் முதலாம் பாதம், தற்போதைய சில புத்தகங்களில் 'ஹேளிதந்தாலிபெ ஸ்ரீனிவாஸ' என்று பாட பேதத்தில் இருக்கிறது. 'ஆலிபே' என்னும் சொல், எதிர்காலத்தைக் குறிக்கும் சொல். ஸ்ரீனிவாசனே, நீ சொல்வதைப் போல நான் கேட்கிறேன். அதாவது, இதுவரை நீ சொன்னதைப் போல நான் கேட்கவில்லை. ஆனால், இனிமேல் நீ கூறுவதைப் போலவே கேட்கிறேன் என்னும் பாவம் தெரிகிறது. இப்படி இல்லாமல் 'ஹேளிதந்தாலிஹெ' என்று கூறினால் 'ஹே ஸ்ரீனிவாஸனே, உன் ஆணைக்கு கட்டுப்பட்டு இப்போது இருக்கிறேன்' என்னும் அர்த்தம் வந்து, சாதனையின் நிஷ்டை, நம்பிக்கை, திட பக்தி என அனைத்தும் வெளிப்படுகிறது.

அடுத்த ஐந்து, ஆறாம் சரணங்களில் தாசார்யர் பகவன் நாம மகிமையை, அதன் சிறப்பினையும் சொல்லி, அந்த பகவன் நாமத்தின் சிரவண, கீர்த்தனை, ஸ்மரணைகளிலிருந்து விலகியிருக்கும் மனிதனின் குறைகளையும், இந்த சூழ்நிலையினால், மனிதன் அனுபவிக்க வேண்டிய கஷ்டங்களையும் தாசார்யர் தெளிவாக கூறியிருக்கிறார்.

நின்ன நாம ஹோளிகெ ஸ்ரீனிவாஸ கள்ள
குன்னி நானாகிஹெ ஸ்ரீனிவாஸ கட்டி
நின்னவரொத்தரெ ஸ்ரீனிவாஸ நன
கின்ன லஜ்ஜெதகெ ஸ்ரீனிவாஸ |

பீஸி கொல்லலவரெ ஸ்ரீனிவாஸ முத்ரெ
காஸி சுச்சலவரெ ஸ்ரீனிவாஸ மிக்க
காஸிகஞ்செனய்ய ஸ்ரீனிவாஸ எஞ்ச
லீஸெய பண்டு நா ஸ்ரீனிவாஸ ||

பகவந்தனின் பெயர் போளி (தின்பண்டம்). அதனை தின்றால், மேலும் தின்ன வேண்டும் என்று நினைக்க வைக்கும் போளி. அற்புத சுவையைக் கொடுக்கும் போளி. ஒருமுறை சுவைத்தால், மொத்த வாழ்க்கைக்கும் மகிழ்ச்சியைக் கொடுக்கும் போளி. பக்ஷ்யங்களில் போளி, மங்கள திரவ்யம். இந்த மங்கள திரவ்யம்கூட கெட்ட பதார்த்தங்களுடன் சேர்ந்தால் அமங்களம் ஆகிவிடுகிறது. பகவந்தனின் நாமமானது, அமங்களமய திரவ்யங்களையும்கூட, மங்களமயமாக செய்யும் பரம மங்களமானது. பரமபாபியான அஜாமிளனின் பாபங்கள் அனைத்தையும் போக்கி, அவனை பவித்ரமாக்கியது ஸ்ரீனிவாசனின் நாமம். கஜேந்திரனின் ஆபத்தினை போக்கியது. நாரதனின் நீசயோனியை களைந்தது. திரௌபதியின் மானத்தைக் காத்து, அகலிகையை மேம்படுத்தியது – நாராயணனின் நாமம்.

யாரொருவனின் நாக்கில் பகவந்தனின் நாமங்கள் எப்போதும் நடனமாடுகின்றதோ, அவன் சிறந்தவனாகவும், பவித்ரமானவனாகவும் ஆகிறான். இதையே வேதவியாஸர்,

அஹோ பத ஷ்வபசோs2தோ கரியான்
யக்ஞேஹ்வாக்ரே வர்த்ததே நாம துப்யம் ||

என்று கூறி தெளிவுபடுத்துகிறார்.

சுலப சாதனைகளில் மிகவும் சுலபமான சாதனை எனப்படும் ஹரி நாமத்தை சுவைத்தவாறு சுகம் அடையாத மானவனின் பிறவி வீண். பகவந்தனுக்கு சம்பந்தப்பட்டவை அனைத்தும், பாகவதம் எனப்படுகின்றன. நாம, ரூப, க்ரியை, குணங்கள் அனைத்தும் பாகவதங்களே. ரஸ

ஸ்வரூபமான ஹரி நாம பாகத்தின் சுவையை நிரந்தரமாக சுவைக்க வேண்டும். இதையே வேதவியாசர், 'ரசிகா: புவி பாவுகா: முஹு: முஹு: ஆலயம் பாகவதம் ரஸம் பிபத' என்று கூறி சமர்ப்பித்தார். மங்களகரமான பகவந்தனின் நாமரூபங்களைக் கேட்ட, நினைத்த, சிந்தித்த மனிதன், சம்சார பந்தனத்தில் சிக்கி வீழ்வதில்லை. அத்தகையவனின் மனம் எப்போதும் பரமாத்மனின் பாத பத்மங்களில் அடிபணிந்திருக்கிறது. இது பாகவதத்தின் அபிப்பிராயம் ஆகும்.

ஷ்ருண்வன் க்ருணன் ஸம்ஸ்மரயன்ஸ்ச சிந்தயன்
நாமானி ரூபாணி ச மங்கலானி தே
க்ரியாஸு யஸ்த்வச்சரணாரவிந்தயோ:
ஆவிஷ்ட சித்தோ ந பவாய கல்ப்யதே ||

பகவந்தனின் நாமம் எங்கெங்கும், எப்போதும் சுலபமாக கிடைக்கும் நிதி. இது நித்யானந்தத்தைக் கொடுக்கும் நிதி. அபகரிக்க சாத்தியம் இல்லாத நிதி. எவ்வளவு பயன்படுத்தினாலும் வளரும் நிதி. பந்தனத்தை விடுவிக்கும் நிதி. இந்த அபூர்வ நிதிக்கு மனதைக் கொடுக்காத மானவன், பிறப்பு இறப்புகளுக்கு காரணங்களான, அழியக்கூடிய, தற்காலிகங்களான ப்ராபஞ்சிக விஷயங்களுக்கு மனமிரங்கி, நாய் போல கஷ்டப்படுகிறான். நாய் சுவையான அன்னத்தை விட்டு, எலும்புத் துண்டுக்காக அலைவதைப் போல ஆகியிருக்கிறது மனிதனின் நிலை. இதனைக் கண்டு மனம் நொந்த தாசர், அனைவருக்கும் நல்லது நடக்கவேண்டும் என்னும் பாவனையுடன் அனைத்தையும் தம் மேல் சுமத்திக்கொண்டு இவ்வாறு கூறுகிறார்.

நின்ன நாம ஹோளிகெ ஸ்ரீனிவாஸ கள்ள
குன்னி நானாகிஹெ ஸ்ரீனிவாஸ -- என்கிறார்.

ஞானபக்தி வைராக்கியங்கள் நிரம்பி வழியும் ஞானிகள் அனைவரும், தம் பாண்டித்யத்தை வெளியில் அதிகம் காட்டிக்கொள்வதில்லை. பிறரின் தோஷங்களை கவனிக்காத தாசர், தம்மையே தோஷியாக ஆக்கிக்கொண்டு, பக்தி மரியாதைகளை வெளியில் காட்டுகிறார்.

இங்கு பிரசன்ன வெங்கட தாசர்கூட தம்மையே நாயாக சிந்தித்து, சாதக ஜீவிகள் அனைவரையும், ஆத்ம விமர்சனம் செய்து கொள்ளுமாறு எச்சரிக்கை விடுக்கிறார். ஸ்ரீனிவாசனின் பரமானுக்கிரகத்திற்கு பாத்திரராகி, அந்த பிரபுவை கண்ணாரக் கண்டு மகிழ்ந்து, தாம் குதித்தாடி, கருணாமயி கிருஷ்ணனை, குதித்தாட வைத்த தன்யஜீவி, பிரசன்ன வெங்கட தாசர். ஞானிகளைப் பற்றி இந்த எச்சரிக்கை எப்போதும் நினைவில் இருக்க வேண்டும்.
செய்த தவறுக்கு பலன்களை அனுபவித்தே ஆகவேண்டும். இதைப் பற்றி ஹரிதாசர்கள் அனைவரும் எச்சரிக்கை விடுக்கின்றனர். செய்த தவறுகளுக்கு சாட்சியாகி மொத்த தேகத்தையே தத்வாபிமானி தேவதைகள் வியாபித்து நின்றிருக்கின்றனர். பூனை கண்ணை மூடினால் உலகமே இருட்டாகிவிட்டது என்று நினைப்பது எவ்வளவு தவறு என்று நமக்குத் தெரியும். அதைப்போலவே, ஜீவியும், தான் செய்யும் தவறுகளை தனக்கு உள் இருக்கும் தத்வாபிமானி தேவதைகள், அவர்களில் அந்தர்யாமியாக இருக்கும் பாரதிரமண முக்யபிராணன், அவனின் அந்தர்யாமியான ரமாபதி நாராயணன் என அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கின்றனர் என்று சிந்தித்தால், தவறுகளுக்கு சந்தர்ப்பமே இல்லை. இந்த எச்சரிக்கையை மறந்த மனிதன், அதற்கான தண்டனையை அனுபவிக்க தயாராக வேண்டும்.

'அவஷ்யமனு போக்தவ்யம் க்ருதம் கர்ம ஷுபாஷுபம்' சம்சாரத்தில் இருக்கும் ஜீவி, தான் செய்த ஷுப அஷுப கர்மங்களுக்கு ஏற்ப ஷுப அஷுப பலன்களை அனுபவித்தே ஆகவேண்டும். பகவத் ஸேவாரூபமான ஷுப கர்மங்களை செய்தால், சுகரூப பலன்கள் கிடைக்கின்றன. பகவத் மறதியால் செய்த அஷுப கர்மங்களால், கஷ்ட ரூப பலன்கள் கிடைக்கின்றன. அவற்றையும் அவன் அனுபவித்தே ஆகவேண்டும். செய்த தவறுகளைப் பற்றி சிந்திக்காமல், பச்சாதாபம் படாமல், வந்த கஷ்டங்களுக்கு பகவந்தனை திட்டுவது கலியுகத்தின் மனிதனின் லட்சணம். இது வேண்டாம் என்கிறார் பிரசன்ன வெங்கட தாசர். வந்தவற்றை அனுபவிக்கும் முன்னர், தவறு செய்யாமல் எச்சரிக்கையுடன் இரு - என்கிறார்.

பகவந்தனின் சேவகர்களாகி, அவனின் ஆணைக்கேற்ப, அவனை அண்டியிருப்பவர்கள் தத்வாபிமானி தேவதைகள். பகவத் ஆணைக்கேற்ப அந்த தேவதைகள், சாதன சரீரத்தை சார்த்தகம் ஆக்கிக் கொள்ளாமல், ஸ்ரீனிவாஸனின் நாம, ரூப, குண, க்ரிய, தர்மங்களை நினைக்காமல், வீணாக காலத்தைக் கழித்த ஜீவிக்கு தண்டனையைக் கொடுத்து தண்டிக்கின்றனர். இதையே பிரசன்ன வெங்கட தாசர் இவ்வாறு கூறுகிறார்.

கட்டி நின்னவரொத்தரெ ஸ்ரீனிவாஸ நன
கின்னு லஜ்ஜேதகெ ஸ்ரீனிவாஸ

புராண உலகில் மஹாபாபிகள் என்று பெயர் பெற்றவர்கள் இருவர். அஜாமிள மற்றும் மாதவ. இருவரும் ஒரு காலத்தில் சதாசாரிகளாக, சத்தர்மாசரணைகளை பின்பற்றுபவர்களாக வாழ்ந்தவர்கள். பிராரப்தத்திற்கு ஏற்ப, வாழ்க்கையின் நடுவில், தடம் மாறி, வாழ்க்கையை பாழ்படுத்திக் கொண்டவர்கள். அஜாமிளன், தன் இறுதிக்காலத்தில் அனந்தனின் பெயரை சிந்தித்து, யமதூதர்களிடமிருந்து தப்பித்து, முக்தி மார்க்கத்தில் பயணித்தான். பவிஷ்யோத்தர புராணத்தின் ஸ்ரீனிவாச கல்யாண கதையில் வரும் மாதவன், குந்தலை என்னும் வைஷ்யப் பெண்ணின் சங்கத்தால், செய்யக்கூடாத பாவங்களை செய்து, கெட்ட வழியில் சென்றான். பாவிகளில் சிறந்தவன் ஆனான். ஆனால், கடைசிக் காலத்தில், வினைப்பயன்களால், அவனுக்கு ஹரிதாசர்களின் சங்கம் கிடைத்தது. பகவத் சம்பந்தமான அவர்களின் பேச்சினைக் கேட்டு, அவர்களை வணங்கியவாறு, அவர்கள் ஹரிக்கு அர்ப்பித்த அன்னத்தை உண்டவாறு, அவர்களின் சங்கத்தில் இருந்த அவன், முன்னர் செய்த தவறுகளை நினைத்து, பச்சாதாபம் கொண்டு

அபராதி நானல்ல அபராத எனகில்ல
கபட நாடக சூத்ரதாரி நீனு -

என்று சொல்லியவாறு கண்ணீர் விட்டான்.

ஹரிதாசரின் சங்கத்தின் பலன் கிடைத்தது. வெங்கடாத்ரியின் ஸ்பரிசத்தினாலேயே புனிதன் ஆனார். ஸ்ரீனிவாசனுக்கே மாமன் ஆகும் பாக்கியத்தைப் பெற்றான். ஆகாச ராஜனாக ஸ்ரீனிவாசனின் பாத பத்மங்களைக் கழுவி, கன்யாதான சங்கல்ப பூர்வகமாக, பத்மாவதியை ஸ்ரீனிவாசனுக்கு திருமணம் செய்து கொடுத்த அவனுக்கு, ஹரிதாசர்களின் சங்கத்தின் பலன் அபாரமாக கிடைத்தது. விஜயதாசர் இதனை இவ்வாறாக பாடுகிறார்.

ஹரிஷரணர சங்க துரிதஸங்க பங்க
ஹரிஷரணர பதிகரிஸிகொள்ளலு கதி |
ஹரிஷரணர நோட ஹரஹலு ஷுத்ததூட
ஹரிஷரணர ஸந்தருஷனவே லேஸு |
ஹரிஷரணர இத்தாகாரவெ பிரசித்த
ஹரிஷரணர கீர்த்தி அரிதவ குணபூர்த்தி |
ஹரிஷரணர லீலெ விரசிஸலு மேலு
ஹரிஷரணர ஸேவெ பரிவுது பாஷவ
ஹரிவர்ண விஜயவிட்டல நித்ய
தொரெ எந்தவனு ஷரணனு காணிரோ ||

பிரசன்ன வெங்கட தாசரே ஹரிதாசரின் சங்கத்தின் பலனை இவ்வாறு கூறுகிறார்.

சங்கவாகலி சாது சங்கவாகலி
சங்கதிந்த லிங்கதேஹ பங்கவாகலி ||

செய்த பாவங்கள் அனைத்தும் ஹரிதாசரின் சங்கத்தினால் பரிகாரம் ஆகின்றன. அரிஷட் வர்கங்கள் விலகி, மனம் நிர்மலமாகிறது. ஞான வைராக்ய பக்திகள் வந்து சேர்கின்றன.

முறையே லிங்க சரீரத்தின் பங்கமும், இந்த சத்சங்கத்தினால் ஆகிறது. ஆகவே, சாதகஜீவி, சத்சங்கத்திற்காக முயல வேண்டும்.

ஹரிதாசரின் சங்கத்தின் மகிமையையும், அதனால் கிடைக்கும் லாபங்களையும், உலக விஷயங்களால் துக்கப்பட்டு கவலையுடன் இருக்கும் ஜீவிக்கு தாசர் கொடுக்கும் ஆறுதலையும் விவரித்தவாறு பிரசன்ன வெங்கட தாசர்,

ஹேஸி நானாதரு ஶ்ரீனிவாஸ ஹரி
தாஸரொளு பொக்கெ ஶ்ரீனிவாஸ அவர
பாஷெய கேளிஹெ ஶ்ரீனிவாஸ ஆ
வாஸிய ஸைரிஸோ ஶ்ரீனிவாஸ ||

என்னும் இந்த ஏழாம் சரணத்தில் பாடியிருக்கிறார்.

'ஶ்ரீனிவாஸனே, நான் கெட்ட வழியில் வாழ்க்கையை நடத்தினேன். 11 இந்திரியங்களுக்கு ப்ரேரகனாக, ஶ்ரீனிவாசன் என்று பெயர் பெற்ற நீயே என் ஸ்வரூப யோக்யதைக்கேற்ப, என் மேம்பாட்டிற்காக, ஹரிதாசரின் சங்கத்தினை அருளினாய். இப்போது அந்த சங்கத்திலேயே காலத்தைக் கழிக்கிறேன். அவர்களின் நல்வார்த்தைகளை கேட்கிறேன். அவை என்னில் தைரியத்தை வளர்க்கின்றன. இந்த வாடகைக்காரனின் தவறுகளையெல்லாம் மன்னித்து காப்பாற்று'. இது இந்த சரணத்தின் பொருள்.
மானவன், தன் ஆத்ம மேம்பாட்டிற்காக நேராக ஹரியை உபாசிக்கக்கூடாது. அந்த உபாசனையை பகவந்தன்கூட ஒப்புவதில்லை. 'குருவின குலாமனாகுவ தனக தொரெயதண்ண முகுதி' என்று கூறிய புரந்தரதாசர், இதையே விளக்குகிறார். குருவின் மூலம் அச்யுதனின் பிரசாதம் கிடைக்கிறது. இதனை அனைத்து ஹரிதாசர்களும் ஒரு மனதுடன் அங்கீகரித்திருக்கின்றனர்.

குருவே தாயிதந்தெ குருவெ மமதெய்வ
குருவே பரிவார குருவெ கதி நித்ய
குருவே பாலிஸெந்து குருகள பஜிஸி
குருவு தொரெதரெ ஹரிதாதொரெவனு
குருவு மரெதரெ ஹரிதா மரெவனு
குருகள பாதஷிர பர்யந்த
ஸ்மரிஸலு பாபபரிஹார வாகுவுதய்ய
.....
ஹரிமுனிதரெ குரு கருணிபனொம்மிகெ
குருமுனிதரெ ஹரி பொரெய
ஹரிக்ருபகெ முக்ய குருவெ காரணனெந்து

குருவின் இடத்தில் இருக்கும் ஹரிதாசர்களை அணுகினால், அவர்கள், சாதகனுக்கு கருணையைக் காட்டி அருள்வார்கள். அவனின் தவறுகளை திம்மப்பனிடம் சமர்ப்பித்து, காப்பாற்றுமாறு வேண்டிக் கொள்வார்கள். பகவந்தனின் காருண்யத்தை விவரித்து, சாதகனில் தைரியத்தை நிரப்புவார்கள். இந்த அனைத்தையும் அறிந்த தாசர்கள், தாம் பகவந்தனை வேண்டியவாறு, நம்மையும் பிரார்த்திக்குமாறு கூறுவர்.

ஹேஸி நானாதரு ஶ்ரீனிவாஸ ஹரி
தாஸரொளு பொக்கெ ஶ்ரீனிவாஸ அவர
பாஷெய கேளிஹெ ஶ்ரீனிவாஸ
இந்த சரணத்தின் நான்காம் பாதத்தில் தாசர் பயன்படுத்தியிருக்கும் 'ஆவாஸி' என்னும் சொல்லுக்கு வாடகைக்காரர் என்று அர்த்தம். சில புத்தகங்களில் இந்தச் சொல் 'ஆவாஸெ' என்று தவறாக வந்திருக்கிறது.

உலகம் அனைத்தும் சேதன அசேதன என்னும் இரு பதார்த்தங்களால் நிறைந்திருக்கிறது. இந்த அனைத்தையும் ஸ்ருஷ்டிக்குக் கொண்டு வந்தவன் பகவந்தனே. நிலம், தண்ணீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய அசேதன பதார்த்தங்களை ஜீவர்களின் அனுபவத்திற்காக, அவரின் சாதனைக்காக பகவந்தனே படைத்தான். அனைத்தும் அவனுடைய செல்வமே ஆகும். அவன் அருளிய இந்த செல்வத்தை நமதாக சிந்திக்கக்கூடாது. நல்ல மனதுடைய செல்வந்தன், தான் கட்டிய வீட்டினை, ஒரு நல்ல மனிதனுக்கு வாடகைக்கு விடுகிறான். அந்த வீட்டில் வாடகைக்கு இருக்கும் மனிதன், 'இந்த வீடு என்னுடையதல்ல. என் சுகத்திற்காக, என் சாதனைக்காக, செல்வந்தன் கொடுத்திருக்கிறான். இதனை சுத்தமாக வைத்துக்கொண்டு, அவனுக்கே திருப்பிக் கொடுக்க வேண்டும்' என்று நினைக்க வேண்டும். இதனால், வீடு கொடுத்த மனிதனுக்கு மகிழ்ச்சி ஆகிறது. அப்படியில்லாமல், தாம் தற்காலிகமாக தங்கிய வீட்டினை, தன்னுடையது என்றே நினைத்து, அதனை பாழ் படுத்தினால், வீட்டுக்காரருக்கு கோபம் உண்டாகிறது. இதனால் அனர்த்தமே உண்டாகிறது.

இதனை நன்றாக அறிந்த பிரசன்ன வெங்கட தாசர், 'ஸ்ரீனிவாசனே, நந்தேனதோ ஸ்வாமி, நிந்தே இதெல்லவு' (என்னுடையது எதுவும் இல்லை. அனைத்தும் உன்னுடையதே' என்கிறார். மயக்கத்தால் அனைத்தும் என்னுடையது என்று நினைத்தேன். தவறு செய்தேன். இந்த தவறினை மன்னித்து என்னை காப்பாற்று என்று பிரார்த்தித்தவாறு, 'ஆவாஸிய ஸைரிஸோ ஸ்ரீனிவாஸா' என்று பாடுகிறார்.

திங்களவனல்ல ஸ்ரீனிவாஸ வத்ஸ
ரங்களனல்ல ஸ்ரீனிவாஸ ரா
ஜங்கள ஸவடிபெ ஸ்ரீனிவாஸ ப
வங்கள தாடுவெ ஸ்ரீனிவாஸ ||

இது கிருதியின் எட்டாம் சரணம். இந்த சரணத்தில் தாசர், ஸ்ரீனிவாசனின் தாஸ்யத்தை விரும்பியிருக்கிறார். இந்த சரணம் தாசரின் கர்வம் இல்லாமைக்கு தக்க சான்றாக இருக்கிறது. தாசர், ஸ்ரீனிவாசனிடம் தம்மை சம்பளத்திற்கு வைத்துக் கொள்ள வேண்டும் என்று பிரார்த்தித்தவாறு, தம் தகுதியையும், தம் விருப்பத்தையும் எடுத்து வைக்கிறார்.

இந்த சரணத்தில் இருக்கும் திங்களு, வத்ஸரங்களு, ராஜங்களு, ஸவடிபெ என்னும் இந்த நான்கு சொற்களுக்கு அர்த்தங்களை சரியாகப் புரிந்து கொள்ள வேண்டும். திங்களு, வத்ஸரங்களு என்னும் சொற்களுக்கு மாத, ஆண்டுகள் என்னும் அர்த்தங்கள் புகழ்பெற்றவை. மாத, ஆண்டுகளுக்கு சம்பிரதாயமாக இன்னொரு விதத்தினால் அர்த்தத்தை சொல்வது பழக்கத்தில் இருக்கிறது. சைத்ர வைசாகாதி 12 மாதங்களின் பெயர்களை எடுத்துக்கொண்டு, அவற்றில் ஏதாவது இரு மாதங்களின் பெயர்களை எடுத்து, இங்கு திங்களு என்று சொல்லியிருக்கும் இடத்தில் பொருந்தி, அந்த வாக்கியத்திற்கு அர்த்தம் சொல்லிக் கொள்வது ஒரு சம்பிரதாயம்.

இந்த நோக்கத்தில், இந்த சரணத்தில் தாசர் பயன்படுத்தியிருக்கும் திங்கள் மற்றும் வத்ஸர சொற்களுக்கு புது அர்த்தத்தை சொல்லலாம். பிரசன்ன வெங்கட தாசர் சரணத்தில் திங்களு சொல்லினை ஒருமையிலும், வத்ஸர சொல்லினை பன்மையிலும் (வத்ஸரங்களு) பயன்படுத்தியிருக்கிறார். திங்களு சொல்லிற்கு சிறந்த என்னும் அர்த்தத்தைக் கொண்டால், திங்களவனல்ல என்றால், சிறந்தவனல்ல என்று அர்த்தம் ஆகிறது. இதைப்போல, வத்ஸர சொல்லுக்கு விபவ, ப்ரமோத, விக்ரம, சர்வஜித், என்னும் வத்ஸாரங்களின் பெயர்களை அர்த்தமாகக் கொண்டால், ஸ்ரீனிவாஸ நான் விபவ உள்ளவனல்ல; ப்ரமோத உள்ளவனல்ல; விக்ரம உள்ளவனல்ல; ஸர்வஜித் உள்ளவனல்ல என்று அர்த்தங்கள் வருகின்றன.

தாசர் திங்களவனல்ல என்று சொல்லி, 'பிரபோ, ஸ்ரீனிவாசனே, நான் சிறந்தவனல்ல. மிகவும் அல்பன். உன் தாசன். உன் தாசரின் தாசரின் வீட்டின் தாசன் நான் என்று சொல்லிக் கொள்கிறார். இதனால் தாசரின் கர்வம் இன்மை, மரியாதை மற்றும் தாஸ்ய பாவங்கள் தெளிவாகிறது. தாசன் ஆகாமல் ஸ்ரீஷனின் அருள் கிடைக்காது. நான் கர்வம் இல்லாதவன் ஆகவேண்டும்.

வினயபூஷிதன் ஆகவேண்டும். நான், எனது, என்பதை விட்டு, நீ, உனது என்று எப்போதும் சிந்திக்க வேண்டும். தாசன் ஆனவனுக்கு பவ பாஷம் நீங்குகிறது'.

தாசரின் வேண்டுதல் இத்தோடு நிற்கவில்லை. 'பிரபோ, ஸ்ரீனிவாசனே. நான் வத்ஸரங்கள் அல்ல. என்னில் எவ்விதமான லௌகிக ஆசைகளும் இல்லை. வாழ்க்கையின் மேம்பாட்டிற்கு காரணங்களான ஞான, வைராக்ய, பக்தி என்னும் செல்வங்களும் என்னிடம் இல்லை. உன் ஸ்மரணை, சிந்தனை, கீர்த்தனை தரிசனங்களால் தூரமாக இருப்பதால் ஆத்யாத்மிகமான ஆனந்தத்தை அனுபவிக்காமல் இருக்கிறேன். ஸ்ரீனிவாசனே, உன் சர்வோத்தமத்வத்தை மறுக்கும் துர்வாதிகளை, ஹரிதானைப் போல எதிர்க்கும் வீரம் இல்லாமல் பேடியாக இருக்கிறேன். இதனால், நான் அனைத்தையும் வெல்லாதவனாக இருக்கிறேன். (சர்வஜித் அல்ல). என்னில் இருக்கும் பஞ்சஞானேந்திரியங்கள் பஞ்ச கர்மேந்திரியங்கள், மனஸ் இவையே எனக்கு எதிரிகளாக ஆகி, இதனை வெல்வதற்கு சாமர்த்தியம் இல்லாதவனாக ஆகியிருக்கிறேன். இதுவரை ஒரேயொரு இந்திரியத்தையும் நான் வெல்லவில்லை. எந்த பாரத்தையும் தாங்காத மனிதன் நான். ஆனால், உன் சேவகனாக வாழவேண்டும் என்னும் விருப்பம் மட்டும் அதிகமாக இருக்கிறது. தந்தையே, ஸ்ரீனிவாசனே, உன் கோயில்களில் முற்றத்தினை சுத்தம் செய்யும் வேலையை அளித்து அருள்வாயாக' என்று பிரார்த்திக்கிறார்.

இந்த தாத்பர்ய அர்த்தங்கள் :

திங்களவனல்ல ஸ்ரீனிவாஸ வத்ஸ
ரங்களவனல்ல ஸ்ரீனிவாஸ ரா
ஜங்களஸவடிபெ ஸ்ரீனிவாஸ

என்னும் இந்த மூன்று பாதங்களிலிருந்து தெரிகிறது. இந்த மூன்று பாதங்கள் மற்றொரு அர்த்தத்திலும் தம்மை தாம் வெளிப்படுத்திக் கொள்கிறது. இந்த சமூகத்தில் தற்காலிகமான லௌகிக விருப்பங்களால் பகவத் ஆராதனை செய்பவர்களே அதிகம். கடமை புத்தியினால், எதையும் எதிர்பார்க்காமல், பலன்களை எதிர்ப்பார்க்காமல், ஸ்வாமியை வணங்குபவர்கள் மிகவும் குறைவு. இதனால், தாசராக பக்தியுடன் சேவை செய்யும் காலம் மிகவும் குறைந்து விட்டிருக்கிறது. இந்த செயல், பலன்கள் கிடைக்கும் வரை மட்டுமே. பலன்கள் கிடைத்தவுடன் பக்தி, சேவை, தாஸ்யங்கள் அனைத்தும் முடிந்துவிடுகின்றன. இது சரியல்ல. ஜீவ பரமாத்மரில் இருக்கும் தாஸ ஈஷ பாவம், அனாதியானது. பகவந்தன் எப்போதும் ஈஷ. ஜீவி எப்போதும் அவனின் தாசன். பலன்களின் விருப்பம் இல்லாமல், அளப்பரிய அன்புடன் பக்தியுடன் பகவந்தனுக்கு சேவை செய்வதே ஜீவியின் முக்கிய கடமையாகும். இந்த தாஸ சேவா ஸ்வரூபங்களை சமூகத்திற்கு தெரிவிக்கும் நல்ல நோக்கத்தினாலேயே பிரசன்ன வெங்கட தாசர்,

திங்களவனல்ல ஸ்ரீனிவாஸ வத்ஸ
ரங்களவனல்ல ஸ்ரீனிவாஸ ரா
ஜங்கள ஸவடிபெ ஸ்ரீனிவாஸ

என்று பாடியிருக்கிறார்.

பிரசன்ன வெங்கட தாசர், ஸ்ரீனிவாசனிடம் தம்மை தாசனாக அங்கீகரித்து சம்பளத்திற்கு வைத்துக் கொள்ளுமாறு கேட்கிறார். ஸ்ரீனிவாசன் தாசரிடம் 'எவ்வளவு காலம் எனக்கு தாசனாக இருக்கிறாய்? உன் விருப்பம் என்ன?' என்று கேட்டான். பகவந்தனின் கேள்விக்கு தாசர் கொடுத்த பதில் இதுவே. 'ஸ்ரீனிவாசனே, என் உன் சம்பந்தம் அனாதி. நீ ஆதி அந்தங்கள் இல்லாத புராண புருஷன். நானும்கூட ஆதி அந்தங்கள் இல்லாத புராண புருஷனே. நீ சதா-ஈஷன். நான் எப்போதும் உன் தாசன். இந்த சம்பந்தம் பிரிக்க முடியாத சம்பந்தம். இது மாதம், ஆண்டுகளுக்கு கட்டுப்பட்டதல்ல. நீ எதுவரை இருக்கிறாயோ, நான் எதுவரை இருக்கிறேனோ, அதுவரை உனக்கு சேவை செய்வதே என் கடமை. என்னிடமிருந்து சேவை பெற்றுக்கொள்வதே உன் கடமை. நான் உன் சேவகன். தாசன். சம்பளத்திற்கு வேலை செய்பவன். எனக்கு பெரிய வேலை வேண்டாம்.

உன் வீட்டின் முற்றத்தைப் பெருக்கும் வேலையாவது கொடு. அதுவே என் மகா பாக்கியம். அதுவே பெரிய வேலை' என்றார்.

ராஜ+அங்கள = ராஜாங்கள. இந்த சொல், தாசரின் வாயிலிருந்து ராஜங்கள என்று வெளிவந்தது. தாசர் கவிகள். அவர் புதுப்புது சொற்களை கண்டுபிடித்தவர். மொழி என்பது ஒரே ரூபத்தில் நிலையாக இருப்பதில்லை. அது தினமும் புதிய மாற்றங்களைக் கொள்கிறது. வளர்வதே அதன் ஸ்வபாவம். புதுப்புது சொல், அர்த்தங்கள் மொழி அகராதியில் சேர்ந்து கொண்டே இருக்கிறது. கன்னட மொழி அகராதிக்கு பிரசன்ன வெங்கட தாசர் கொடுத்த பரிசு இந்த 'ராஜங்கள' என்னும் சொல். எந்த அகராதியிலும் இந்த 'ராஜங்கள' என்னும் சொல்லுக்கு அர்த்தம் கிடைப்பதில்லை. ராஜ என்றால் சிறந்த. அங்கள என்றால் முற்றம். பகவந்தனின் கோயில்களின் முன்னால் இருக்கும் இடங்கள் சிறந்தவையே. நிரந்தர பக்தர்களின், ஞானிகளின் சஞ்சாரத்தினால் அது பவித்ரமாகின்றன. அந்த அங்களங்களின் மண் பரம பவித்ரமான மண். இதனாலேயே பக்தர்கள் அனைவரும் கோயிலின் முற்றத்தில் சாஷ்டாங்கமாக வீழ்கின்றனர். உருள்கின்றனர். அங்கத்திய மண்ணினை உடம்பில் பூசிக்கொள்கின்றனர். பிரசன்ன வெங்கட தாசர் இந்த மர்மத்தை அறிந்த யோகி. அதிக வினயத்தைக் கொண்டவர். அதற்காகவே, ஹரிமந்திரத்தின் முன்னால் இருக்கும் முற்றத்தினை, பெருக்கும் வேலையைக் கேட்டார். தம் பிரார்த்தனையை, ஸ்ரீனிவாசனின் முன் வைக்கிறார். 'ராஜங்கள ஸவடிபெ ஸ்ரீனிவாஸ' என்றார். பிரசன்ன வெங்கட தாசரின் இந்த பிரார்த்தனையே விஜயதாசரின் சிஷ்யர் எனப்படும் வேணுகோபால விட்டலதாசருக்கு (பங்க நாம திம்மண்ண தாசருக்கு) ஊக்கமாக இருந்திருக்கலாம் என்று சொல்லலாம். ஆத்வானி வேணுகோபால தாசரின் பிரார்த்தனை ரூபமாக கீர்த்தனையின் ஸ்வரூபம் இவ்வாறாக இருக்கிறது.

ஸம்பளக்கெ இட்டு கொள்ளோ கிருஷ்ணாக்ருபாளோ ||ப

ஸம்பளக்கெ இட்டு கோ நின்ன அம்பலதல்லிர பே
கெம்புதே எனகெ தும்பிதுளுகுதிதெ ||அப

அரகவடி ஒல்லெ ஸம்பள நின்ஹெ
ஸர்ஹேளி மாடுவெ கோபாள
பரடி தம்பூரி ஹிடிது - திரிதுண்டு கொண்டு பந்து
கரெத கெலஸக்கெ ஸித்தனாகுவெ ஈ க்ஷண ||1

மத்வராயர மனெயொளு அனுகால
இத்தெ கேளிகோ குணகள
ப்ரத்யும்ன இவ நின்ன புத்திகெ பந்தரெ
இத்தரெ இரலி எம்போதித்தரெ ஈ க்ஷண ||2

பலுமந்தின்னா நோடிதே நின்னந்தவர
எல்லி நா நோடலில்ல
லோல ஸ்ரீவேணுகோபால விட்டலா நின்ன
கூலி பந்தாக்யு ராஜ்யவாளிதந்தெ ||3

பிரசன்ன வெங்கட தாசரின் 'திங்களவனல்ல' என்னும் சரணம் சூத்ரம் என்றால், வேணுகோபால விட்டலதாசரின் இந்த கீர்த்தனை அதற்கு பாஷ்யம் ஆகும். தாசரின் கீர்த்தனைகளை மனக்கண்களால் பார்க்க வேண்டும். அவருக்கு சரணடைய வேண்டும்.

மாயாவியான ஸ்ரீனிவாஸன், தாசரிடம் 'உனக்கு எவ்வளவு சம்பளம் வேண்டும்?' என்று கேட்டான். வெங்கடனின் சேவகனாக, அவனின் கருணைக்கு பாத்திரரான தாசர், 'ஸ்ரீனிவாசனே, உன் தாஸ்யத்தை மட்டுமே கொடு. தாஸன் என்று ஒரு முறை பார். நிரந்தரமாக உன் பாத சேவை செய்யும் வாய்ப்பினை மட்டும் எனக்குக் கொடு போதும். வரம் கேட்பவன் நான் அல்ல. உனக்கு தாசனாகி, பவ-சாகரத்தை தாண்டுகிறேன்.

கடைசி சரணம், பிரசன்ன வெங்கட தாசரின் ஆத்ம நிவேதன பக்திக்கு ஒரு உதாரணம் ஆகும். இந்த சரணத்தில் தாசர், தம்மைத் தாம் ஸ்ரீனிவாசனின் சரணங்களுக்கு சமர்ப்பித்துக் கொள்கிறார். ‘ஸ்ரீனிவாசனே, நான் எதுவும் அறியாத ஒரு முட்டாள். உன்னைத் தவிர எனக்கு வேறு கதி இல்லை. என் தந்தை, தாய், மக்கள், உற்றார், உறவினர், மனைவி, குரு, நாதன், கதி, மதி, நண்பன் என அனைத்துமே நீதான். பிரசன்ன வெங்கடாத்ரி நாதனே, ஸ்ரீனிவாசனே, என்னை மன்னித்து அருள்வாயாக. நீயே என்னவன் என்னும் கருணையை எனக்கு அருள்வாயாக.

**நின்னவ நின்னவ ஸ்ரீனிவாஸ நா**
**நன்னவ நரியெனோ ஸ்ரீனிவாஸ அய்ய**
**மன்னிஸோ தாய்தந்தெ ஸ்ரீனிவாஸ ப்ர**
**ஸன்ன வெங்கடாத்ரி ஸ்ரீனிவாஸ**

**ஹரே ஸ்ரீனிவாஸ**
**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

***